·லேசான காகிதப்பதிப்பு.
தனிப்பிரதி, $5\frac{1}{2}$ அணா.
பழைய பிரதி, 6 ,,

சந்தாவிவரம்.
ஒரு வருஷத்துக்கு ரூ. 4.
6 மாதத்துக்கு ,, 2-2.






அறிவைப்பரவச்
செய்வதற்கான

மாதாந்தரத்
தமிழ்ப்பத்திரிகை.





புத்தகம் 10.] 1901ஆ ஜூலைமீ [இலக்கம் 3.


## Terms of Subscription to the 'Viveka Chintamani.'

**Thick Paper Edition** for Patrons, Reading Rooms, School and Circulating Libraries, &c.

Minimum Subscription Rs. 5 per annum.

Single Copy $7\frac{1}{2}$ As.: Back Nos. 8 As. each.

ENGLISH & FOREIGN SUBSCRIPTION *7s. 6d.* NET PER ANNUM.

**Thin Paper Edition** for the People:—

SUBSCRN. PRICE: YEARLY RS. 4; HALF-YEARLY RS. 2-2.
SINGLE COPY, CURRENT NO. $5\frac{1}{2}$ AS.; BACK NOS. 6 AS. EACH.
ENGLISH & FOREIGN SUBSCRIPTION *5s. 6d.* NET PER ANNUM.

**If strictly Prepaid** at the commencement of the term, (*i. e.*, in May of each year) 8 As. discount off the annual rate, and 4 As. off the half-yearly rate.

Subscriptions entered to begin with only April or May of each year. Enrolled Subscribers may not withdraw except at the end of the year.

☞ To regular annual subscribers 2 months' grace is allowed for the prepayment of subscription, and in the case of regular half-yearly subscribers 3 weeks' time, within which all subscriptions should be paid to entitle them to the discounts allowed.

Subscriptions cannot be closed in the middle of a *Volume*, though regular subscribers may elect to pay their subscriptions in half-yearly instalments. *All notices for discontinuance are to be given in the beginning of the new year, i. e., in April or May; for otherwise one should have to pay for the whole of the current volume.* Outstanding subscriptions are often realised by V. P. P. to prevent accumulation of arrears.

In all business correspondence, Subscribers are requested to quote their register number found on the wrapper, as it would ensure prompt attention and save vexatious delay and needless correspondence.

## விவேகசிந்தாமணி சந்தாவிவரம்.

தளமான காகிதப்பதிப்பு:—அத்தியக்ஷர்கள், ரீடிங்ரூம்கள், புத்தகசாலைகள் முதலான ஸ்தாபனங்களுக்கு உபயோகமானது. ☞ வருஷ சந்தா குறைந்தது ரூ. 5. தனிப்பிரதி $7\frac{1}{2}$ அணா. பழைய பிரதி 8 அணா.

லேசானகாகிதப்பதிப்பு:—சாதாரணமாய் எல்லா ஜனங்களுக்கும் உபயோகமானது.

வருஷசந்தா ரூ. 4. 6-மாசத்துக்கு ரூ. 2-2.
தனிப்பிரதி $5\frac{1}{2}$ அணா. பழைய பிரதி 6 அணா.

வருஷாரம்பத்திலே (அதாவது மேமாசத்தில்) தவருமல் கட்டினால் வருஷசந்தாவில் 8 அணாவும், 6-மாச சந்தாவில் 4 அணாவும் தள்ளிக்கொடுக்கப்படும்.

ஏப்பிரல் அல்லது மேமாதம் துவக்கியே சந்தாக்கணக்கு வைக்கப்படும். ரிஜிஸ்தரான சந்தாதாரர்கள் வருஷமுடிவிலன்றி மற்றபடி சந்தாவை நிறுத்துதல் கூடாது.

☞ வருஷக்கணக்காக ஒழுங்காய்ச் சந்தாசெலுத்திவருகிறவர்களுக்கு இரண்டு மாசத்தவணையும், 6-மாசக்கணக்காக ஒழுங்காய்ச்சந்தா செலுத்திவருகிறவர்களுக்கு மூன்று வாரத்தவணையும் கொடுக்கப்படும். அதற்குள் சந்தாவை முன்பணமாகச் செலுத்துகிறவர்களுக்கே மேற்கண்ட தள்ளுபடி செய்துகொடுக்கப்படும்;

பத்திரிகையை வருஷமத்தியில் நிறுத்தக்கூடாது. நிறுத்தவிரும்புகிறவர்கள் வருஷாரம்பத்தில் அதாவது ஏப்பிரல் அல்லது மே மாசத்திலே நோட்டீஸ் கொடுக்கவேண்டும்; அப்படிக்கின்றி மத்தியில் நிறுத்தினால் அந்தவருஷ முழுவதற்குமுள்ள சந்தாவைச் செலுத்திவிடவேண்டும். சந்தாபாக்கிகள் V. P. P. மூலமாக [illegible]ல்செய்யப்படும்.

கையொப்பக்காரர்கள் ஆபீசுக்குக் [illegible]மெழுதும்போதெல்லாம் அவர்கள் ரிஜிஸ்தர் நம்பரைக் குறி[illegible]டெழுதவேண்டும். அப்படிச்செய்வதால் அவர்கள் எழுதும் கடிதம் உடனே கவனிக்கப்படுவதன்றி அதிக தாமதத்துக்கும் வீண் கடிதப்போக்குவரவுக்கும் இடமிராது.

உ

சிவோஹம்.

* அன்பும்சிவமு மிரண்டென்பர் அறிவிலார்
அன்பேசிவ மாவதியாரும் அறிந்திலார்
அன்பேசிவமாவதியாரும் அறிந்தபின்
அன்பேசிவமா யமர்ந்திருப்பாரே:—திருமந்திரம்.

IN LOVING MEMORY

OF

**SRI LOKANAYAKI AMMAL,**

**the beloved and devoted wife**

OF

**C. V. SWAMINATHA AIYAR,**

**who breathed her last**

AS THE CLOCK CHIMED IN THE HOUR OF ELEVEN

ON

*Tuesday night the 16th July 1901,*
*in her 24th Year.*



Possessed of a pure and loving heart and abounding faith in Truth and Goodness, she was his inseparable companion and helpmate for 12 years; and with her true sympathy and divine patience, has been a source of great strength and inspiration to him in all his work.

*Requiescat in pace.*

அப்தேஸ்மிந் ப்லவநாமகேதிரமணௌ கற்கிம்கதே பாண்டரேபக்ஷே பூமிஜவாஸரே சிகிதிதௌ புஷ்யேசருக்ஷே சுபே ।
வாதூலாந்வய வாரிதே: சசிகலா ஸ்ரீலோகநாயகி அஸௌ பேஜே ப்ரஹ்மபதம் ஸ்வகீய ஸுகிருதை: ஸத்புத்ர ஸந்தாரிதா ॥

"கொம்பில் அரும்பாய்க் குவிமலராய்க் காயாகி,
வம்புபழுத் துடலமாண்டு, இங்ஙன்போகாமே
நம்பும் என்சிந்தை நணுகும்வண்ணம் நான் அணுகும்
அம்பொன் குலாத்தில்லை ஆண்டானைக்கொண்டன்றே!"-திருவாசகம்.

* Cf. John : "God is love, and he that dwelleth in love, dwelleth in God, and God in him."

விவேகசிந்தாமணியை வாசிப்போர்க்கு.

இரண்டுமாசங்களாக விவேகசிந்தாமணிப் பத்திரிகை வெளியாகாமல் நின்றதற்காக விசனிக்கிறோம். நமக்கு நேர்ந்த பல இக்கட்டுகளினால் இப்படித் தடைப்பட்டு நிற்பதைத் தடுக்க நம்மால் முடியாமற் போய்விட்டது. இனி பத்திரிகை முறைப்படிவெளியாவதற்கு வேண்டிய முயற்சிசெய்யத் தடையிராதென்று நம்புகிறோம். நமது தேகம் எற்கனவே மிகப் பலவீனப்பட்டு நலுக்குற்றிருப்பதால் இச்சமயத்தில் மிதமிஞ்சி யுழைப்பது சாத்தியமாகவாவது யுக்தமாகவாவதில்லை. ஆயினும் வெகு சீக்கிரத்தில்தானே பத்திரிகை முறைப்படிப் பிரசுரமாகிவருவதற்கு வேண்டிய ஏற்பாடுசெய்யப்படுமென்பதை இதுமூலமாக நமது பத்திரிகாபிமானிகளுக்குத் தெரிவிக்க விரும்புகிறோம்.

## "எண்ணினேன் எண்ணமிது ஸ்வாமி."

"பேசப்பட்டேனின்னடியாரிற் றிருநீறே
பூசப்பட்டேன்; பூதலராலுன் னடியான் என்
றேசப்பட்டேன்; இனிப்படுகின்றதமையா தால்
ஆசைப்பட்டேன்; ஆட்பட்டேன்உன் அடியானே."

ஒன்பது வருஷகாலமாக அலுப்புச்சலிப்புப் பாராமலுழைத்து உடல்நொந்து மனம் கிலேசப்பட்ட நாம் 10-வது வருஷ ஆரம்பத்திலும் முன்போல் உழைத்துவரச் சித்தமாயிருக்கிறோமென்று மே மீசத்துச் சஞ்சிகையில் வாக்களித்தபொழுது நமக்குச் சகிக்கரியதுன்பம் இவ்வளவு சீக்கிரத்தில் நேரிடக்காத்துக் கொண்டிருக்குமென்று நாம் முன்னுணரவில்லை. நம் உயிர்க்குயிராயிருந்து நாம் மேற்போட்டுக்கொண்ட எல்லா வேலைகளிலும் பக்கபலமாயிருந்துதவி, சிரமபரிஹாரம் செய்து, எவ்விதத்திலும் நமக்கு உண்மையான வாழ்க்கைத்துணையாயிருந்த பெறலரும் பெருநிதியத்தை யிழந்துவிட்டோம். இகத்தில் ஒருவன் பெற்கூடிய பாக்கியங்க ளெல்லாவற்றிலும் பெரும்பாக்கியமாம் உண்மையான வாழ்க்கைத்துணைநல்லாளை யிழந்தவன் இவ்வுலகத்தில் மிகவும் துர்ப்பாக்கியனே. ஆனாலும் அவன் கடவுளால் கைவிடப்பட்டவனென்று சொல்வதற்கில்லை. உண்மையில் கடவுள் யாரையும் கைவிடுவதில்லை. மனிதரே கடவுளை மறந்து தம் வினைப்பயனால் துன்பம் நேர்ந்தகாலத்தில் வீணே கடவுளைப்பழித்து நொந்துகொள்கிறார்கள். "கடவுளை நம்பினோர் கைவிடப்படார்" என்னும் மூதுரை எவ்விதத்திலும் உண்மையானதே. ஆகையால் பாக்கியங்கள் எல்லாவற்றிலும் இவ்வுலகில் பெறற்கரிய பெரும்பாக்கியமான கற்புடை மனைவியைப்பெற்று,

"அறத்தாற்றினில்வாழ்க்கை யாற்றிற்புறத்தாற்றிற்
போஒய்ப்பெறுவதெவன்"

என்னும் உண்மைக்கு இலக்காய் அவளுடன் ஒத்துவாழ்ந்து, இந்த இல்லறத்தைவிட்டுத் துறவறத்திற்போய்ப் பெறும் பயன் என்னவிருக்கிறதென் றுணர்ந்துகொள்ளும்படியான பாக்கியம்பெற்றவன் கடவுளால் கைவிடப்பட்டவனுகான். இவன் இல்வாழ்க்கையின் உண்மைப்பயனை யனுபவித்தவனே யன்றி அனுபவிக்காதவனென்று சொல்வதற்கில்லை.

"அறனெனப்பட்டதே யில்வாழ்க்கையஃதும்
பிறன்பழிப்பதில்லாயினன்று."

அறன் என்று சிறப்பித்துச் சொல்லப்பட்டது இல்வாழ்க்கையே; மற்றத் துறவறமும் பிறனால் பழிக்கப்படுவதில்லாதிருந்தால் நல்லதாகும் என்றார். இப்படிப்பட்ட இல்லறத்தை முறைப்படி நடத்தி "இல்வாழ்க்கையென்னுமியல்புடைய வான்சகடத்தை" மனதொத்து இழுத்துச்சென்று முடிவெய்திய தம்பதிகளுக்குக் குறைவு ஒன்றுமில்லை யென்பது மெய்யறிவுணர்ந்த மேலோர் துணிபு. தெய்வபக்தி பூரணமாயுள்ளவர்களுக்கு யாதொரு துன்பமும் நேரிடுவதில்லை.

"வேண்டுதல் வேண்டாமையிலானடி சேர்ந்தார்க்
கியாண்டுமிடும்பையில."

என்றார் திருவள்ளுவநாயனாரும். இது மட்டுமோ; அப்படிப்பட்டவர்களை இருவினைக

ளும் சேருவதில்லை. மத்திமவயதில் மனையாளையிழத்தல் துன்பமும் துக்கமுமே யென்றால் அது வாஸ்தவமென்று ஒத்துக் கொள்கிறோம். ஆனால் இந்தத் துன்பமும் துக்கமும் இவ்வுலகில் யாருக்குத்தானில்லை! இந்த மனக்கவலையை மாற்ற மருந்து ஒன்றே உண்டு.

"தனக்குவமையில்லாதான் தாள்சேர்ந்தார்க்கல்லால் மனக்கவலை மாற்றலரிது."

கடவுளுடைய திருவடியைச் சேராதவருக்கு மனக்கவலை நீக்குதலில்லையாதலால் அவர் திருவடியையே நாடி அதையே சிந்திப்பது ஒன்றே மனக்கவலையைப் போக்குவதற்கான பரம ஔஷதமாம். இஃதன்றி வேறுகைகண்ட ஔஷதம் யாதுமில்லை. இதனுண்மையை நாம் முன்னரே யுணர்ந்துளோம். "ஸ்வாமி, என்னைக் கொன்றாலும் நீயே சரணம்" என்பது எங்களிருவரது மனோபாவத்தை விளக்கும் மேற்கோளாக விருந்தது. இவ்வுறுதி நிலையினின்றும் சோராது "சங்கரா போற்றி! மற்றோர் சரணிலேன், போற்றி!" யென்று கடைசி நிமிஷம் வரையில் கடவுளைப் போற்றி அவள் காலத்தைக் கழித்துவிட்டுப் போய் விட்டாள். எஞ்சிநின்ற நாமும் அதேவழியில் உறுதி வழுவாதுநின்று கருமத்தைக் கழித்துத் தொலைத்துவிட்டுப் போகவேண்டிய தொழிய வேறில்லை. ஸ்தூலத்தில் பிரிவு நேரிட்டாலும் உண்மையில் பிரிவு நேரிடவில்லை யென்பது ஆத்ம ஐக்கிய அனுபவமுள்ளவர்களுக்கன்றி மற்றவர்களுக்கு யார் என்ன சொல்லினும் ஏறாது.

"கற்றதனாலாய பயனென்கொல்வாலறிவன் நற்றாள் தொழாஅரெனின்"

மெய்யறிவுடைய கடவுளை வணங்காராகில் கற்றதனாற் பயனில்லை யென்று திருவள்ளுவர் சொல்லிய உண்மைவாக்கை யோர்ந்து ஸத்திய நித்திய சச்சிதானந்த ஸ்வரூபமாகிய மெய்க் கடவுளை யறிந்து அவரது தாள்பணியும் வழியொன்றையே பெரிதாக வெண்ணி யொழுகிய அவள் நல்ல கதியடைந்தாள். இனி நாமும் நற்கதிகிடைப்பதை யெதிர்பார்த்துக்கொண்டு காலத்தைத் தள்ளவேண்டியதே. இந்தச்சமயத்தில் நமது நண்பர்கள் பலர் நமக்கு நேர்ந்த நஷ்டத்தைக்குறித்து மிகவும் மனதுருகி ஹிருதய பூர்வகமாக ஆறுதல்கூறி நமக்குக் கடிதங்கள் எழுதியுள்ளார். அவர்கள் உள்ளன்போடு அளித்த ஆறுதல் வாக்கியங்களுக்கும் காலஞ்சென்றவளது நலத்தைப்பற்றிக் கொண்டாடி அவர்கள் உண்மையாக எழுதியதற்கும் நாம் அவர்களுக்கு நன்றியறிதல் செலுத்தக் கடமைப்பட்டவரா யிருக்கிறோம். ஸ்வாமியினுடைய அனுக்ரகத்திற்குப் பிறகு நல்லவர்கள் பெரியவர்களுடைய அனுதாபமும் ஆப்த வாக்கியமுமே இவ்வுலகில் உத்தமர் விரும்பத் தக்க பெரும்பாக்கியமாம். அப்படியிருக்க, இப்படிப்பட்ட மஹாபாக்கியத்தைப் பெற்ற நாம் அவர்களுக்கு ஹிருதயபூர்வகமாக வந்தனமளிப்பதன்றி வேறென்ன கைம்மாறு செய்யவல்லேம்.

"மலர்மிசையேகினான் மாணடிசேர்ந்தார் நிலமிசை நீடுவாழ்வார்"

என்று பெரியோர் சொல்லியுளார். இதன் உண்மையை யுணர்ந்த பக்திமான்களன்றி மற்றவர் காலஞ்சென்றவள் விஷயமாக நேர்ந்த பல அற்புதக்குறிகளை யுள்ளபடி யோர்ந்து உணரவறியார். ஆகையால் அவற்றைப்பற்றி இங்கு ஏதும் சொல்லாது, அந்த அம்மணி நமக்குண்மையில் வாழ்க்கைத்துணையா யிருந்து எவ்விதத்திலும் உதவிசெய்து வந்ததையறிந்த சில நண்பர்கள் அதைக்குறிப்பிட்டு நமக்கெழுதியுள்ளதை யங்கீகரித்து அவள் நமக்குச்செய்த பேருதவியைமட்டும் இங்கு பகிரங்கமாய் ஒப்புக்கொள்ளக்கடமைப் பட்டிருக்கிறேம். விவேகசிந்தாமணி விஷயமாய் நாம் வேலைசெய்து வந்ததில் அனேக விஷயங்களில் அவள் உற்றவிடத் துதவியாயிருந்து ஒத்தாசை செய்துவந்தாள். எந்த விஷயத்தில் சிரத்தை யெடுத்துழைக்கநேரிட்டா

லும் அவள் புத்திக்கெட்டினவரையில் அவ்விஷயங்களிலெல்லாம் அவளும் கூடவேசேர்ந்து சிரத்தைப்பட்டுழைப்பது வழக்கம்.

இது காரணத்தினுல் இந்தியாவில் பெண் கல்வியார்த்தம் உழைக்கும் பரோபகார சிந்தையுள்ள சில ஆங்கிலேய துரைசானிகளுக்கும் இவளுக்கும் பரிச்சயமுண்டாக நேரிட்டது. இப்படி பரிச்சயமுண்டானவர்களில் மிஸ் மானிங் துரைசானி இவளைத் தாயன்போடு நேசித்துவந்தாள். இவளும் அவரிடத்தில் விசேஷ அன்பு பாராட்டி வந்தாள். மிஸ் மானிங் துரைசானி சென்னைக்கு வந்தபொழுது அவ்ருடைய விசுவாசத்தினுல் மனமுருகினவளாய் அவருடன் நேரில் பேசமுடியாததற்காக விசனமுற்று, அக்குறையை நிவர்த்திக்க இங்கிலீஷ் கற்றுக்கொள்ளவேண்டுமென்று முயன்றுவந்தாள். பிறகு சில மாதங்களுக்கெல்லாம் கைக்குழந்தையொன்று இறந்துபோக நேரிட்டதில், உலகவின்பங்களில் ஒருவித வெறுப்புண்டாகி, பிரபஞ்ச வாழ்க்கை நிலையற்றதென்றுணர்ந்து பக்தி மார்க்கத்தில் மனதைச் செலுத்தத் துவக்கினுள். அதுமுதல் மதக்கிரந்தங்களையும் தத்துவ நூல்களையுமே விசேஷமாக வாசித்துவந்தாள். ஒருவருஷத்துக்குமுன் தன் கணவர் வேதாந்த விசாரத்தில் பற்றுற்றவராய் ஞானமார்க்கத்தில் பிரவேசித்திருப்பதை யுணர்ந்து தானும் அவர்கூடவேயிருக்க விரும்பி அவருடன்கூட வேதாந்தவிசாரம் செய்யத்தலைப்பட்டாள். அதுமுதல் இருவருஞ்சேர்ந்து இணைபிரியாமல் வேதாந்தவிசாரம் செய்துவந்தார்கள். அப்பொழுது இவளுடைய ஹிருதய சுத்தியும் விசேஷபக்தியும் வெளிப்படத்தெரிபலாயிற்று. இவள் தன் பர்த்தாவுக்குச் செய்த உதவிகள் எல்லாவற்றிலும் ஞானமார்க்கத்தில் போகும் பொழுது அவர் நிலை தடுமாறுதபடி தனது உண்மையான அனுதாபத்தாலும் தேவதா பக்தியினுலும் மிகுந்த பொறுமை, சாந்தம் இவற்ருலும் அவரை நிதானந்தப்பாது நிலை நிறுத்திக்காத்தது மதித்தற்கரிய பேருதவியாம். இவ்வளவு உதவிசெய்தும் அவள் தன் பேர் வெளியில்வரப் பிரியப்படாள். அவள் ஞானமார்க்கத்தில் பிரவேசித்ததால் அவளுடைய உற்ருர் பெற்ருர் தோழிகளெல்லாம் அவளுடைய உண்மையை உணரமாட்டாது அவளிடம் குறைகூறத் துணிந்தார்கள். அவைகளையெல்லாம் அவள் இலக்ஷியம்செய்யாது அவர்களுடைய அறியாமைக்காக மிக வருந்தி இரங்குவாள். 'பேதைமை யென்பது மாதர்க்கணிகலம்' என்பதை யுள்ளத்தில் வைத்து தனக்குள்ள ஞானத்தைப் பிரசுரியாது மூடிக் காப்பாற்றிவந்தாள். வித்யாபட்டம் பெற்றவர்களும் வேதாந்தத்திற் பேர் போன வித்வான்களும் சண்டப்பிரசண்டமாகத் தர்க்கம்செய்து பேசுகையில் அவர்கள் வாய்ப்பிறப்பிலிருந்து அவர்களுடைய உண்மை நிலையை யுணர்ந்துகொண்டு அவரவர் தாராதரத்தைப்பற்றிக் கணவரோடு அந்தரங்கத்தில் பேசிக்கொண்டிருப்பாள். வேதாந்த விஷயத்தில் ஹிருதயசுத்தியின்றி வாசா ஞானம் பேசுகிறவர்களைக் கண்டால் அவளுக்குப் பிடிக்கவே பிடிக்காது. அப்படிப்பட்டவர்களோடு வார்த்தை கொடுப்பதும் வாதம் செய்வதும் பிரயோஜனமற்ற காரியமென்று அடிக்கடி சமயமறிந்து புத்திசொல்வாள். சென்ற ஏப்பிரல் மாசம் முதல் பூர்ணனுபவ சித்தியார்த்தம் வேதாந்தப் பேச்சையே விட்டொழித்து மனதுள் தியானம்செய்து வருவதே சரியென்று தீர்மானித்து நடந்துவந்தாள். மேன்மேலும் சொல்லி வளர்த்தி யாவதென்! இவ்வுலகத்தில் அவள் அனுபவிக்க வேண்டியதெல்லாம் அனுபவித்தாய்விட்டது. அவளுடைய பிராரப்தம் முடியவேஅதற்குக் காரணமாயிருந்த காயமும் விழுந்துபோயிற்று. அவ்வளவுதான். விதிப்பயனைநொந்து வருந்துவதில் பயனில்லை. இவ்வுடலெடுத்த தனுட் கருத்தை யுணர்ந்துய்வதே நெறியாம்.

"உற்றவாக்கையின் உறுபொருள் நறுமலர் எழுதரு நாற்றம்போல்
பற்றல் ஆவதோர் நிலையிலாப் பரம்பொருள் அப்பொருள் பாராதே,

பெற்றவா பெற்றபயனது நுகர்ந்திடும்பித்தர் சொற்றெளி யாமே,
அத்தன் ஆண்டுதன்னடியரிற் கூட்டிய அதிசயங்கண்டா மே."

—திருவாசகம்.

## வாழ்க்கைத்துணை.

"ஓதற்கெளிதா யுணர்தற்கரிதாகி
வேதப்பொருளாய் மிகவிளங்கித்—தீதற்றோ
ருள்ளுதோ றுள்ளுதோ றுள்ளமுருக்குமே
வள்ளுவர்வாய் மொழிமாண்பு."—திருவள்ளுவ மாலை.

இப்படிப்பட்ட சிறப்புப்பொருந்திய திருக்குறளுக்கு ஏற்றமாண்புடைய வடநூல் வால்மீகி இராமாயணம் ஒன்றே. இவ்விரண்டையும் ஒருவர் வாசித்துச் சிந்திக்கச் சிந்திக்க மேன்மேலும் சிறந்தபொருள் விளங்கும். ஏனெனில் இவை யிரண்டும் சத்திய நித்திய மெய்ப்பொருளை ஆதாரமாகக்கொண்டு எழுதப்பட்டமையாலென்க. "அறம், பொருள், இன்பம், வீடென்னு மந்நான்கின் திறந்தெரிந்து செப்பியதேவை" ஒருவன் மறந்தேனும் வள்ளுவனென்று சொன்னால் அவன் மூடனே யாவானென்று மாமூலனார் பாடியிருக்கிறார். இதனால் அவர் தெய்வப்புலவரென்றும் அவரைச்சாதாரணமாகநினைப்பதுபேதைமை யாகுமென்றும் சொல்லியதாயிற்று. திருக்குறளிலுள்ள முப்பாலில் முதலாவதான அறப்பாலில், இல்லறம், துறவறம், ஞானம் என்னு மூன்று பகுதியுள் இல்லறமே சிறப்பித்துச் சொல்லப்பட்டிருக்கிறது. இதை "இல்வாழ்க்கை" யென்னும் அதிகாரத்தில் விரித்துரைத்திருக்கக் காணலாம். இல்வாழ்க்கையிலிருந்து அதற்குரிய இயல்போடு கூடிவாழ்புவன் ஐம்புலன்களை விட முயற்சிசெய்வாரெல்லாருள்ளும் மேற்பட்டவனுவான் என்று சொல்லியிருக்கிறார். இதனால் துறவறத்திலிருந்து ஞானமார்க்கத்தைத் தேடுவதிலும் இல்லறத்தேயிருந்து முறைப்படி தேடுதல் மேலாமென்பது வெளிப்படையாகச் சொல்லப்பட்டதாயிற்று.

"இயல்பினுனில் வாழ்க்கைவாழ்பவனென்பான்
முயல்வாருளெல்லாந்தலை."

"வையத்துள் வாழ்வாங்குவாழ்பவன் வானுறையும்
தெய்வத்துள்வைக்கப்படும்."

இல்லறத்துள் வழுவாதுவாழ்பவன் தெய்வத்துள் ஒருவனாக மதிக்கப்படுவான் என்றார்.

இப்படி தெய்வத்தன்மை யளிக்கும் இல்வாழ்க்கைக்குத் துணையாவாள் கற்புடை மனைவியாம். அவள் சிறப்பு அடுத்த அதிகாரத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

மனைத்தக்க மாண்புடையளாகித்தற்கொண்டான்
வளத்தக்காள் வாழ்க்கைத்துணை.

இப்படிப்பட்ட வாழ்க்கைத்துணையாவாளிடத்து "மனைமாக்ஷி" அதாவது இல்லறத்துக்குத்தகுந்த நற்குண நற்செய்கைகள் இல்லையாயின் அவ்வாழ்க்கை "எனை மாக்ஷித்தாயினும் இல்" என்றார். நற்குண நற்செய்கைகளில்லாத மனையாளுடன் வாழும் வாழ்க்கை காசு, பணம், கீர்த்தி முதலிய பெருமைகள் எவ்வளவுதா னுடைத்தாயினும் அவையெல்லாம் இல்லாததற்கொப்பே யென்று உண்மையாய்ச் சொல்லியிருக்கிறார். இல்லாளிடத்தில் "மனைமாக்ஷி" யாகிய "மாண்பு" ஒன்று மட்டு முண்டானல் அவளுடன் வாழ்வானுக்கு இல்லாதது ஒன்றுமில்லை. அப்படிக்கின்றேல் என்னவிருக்தும் அவனில்லாதவனே.

"இல்லதெனில்லவள் மாண்பானுள்ளதென்
இல்லவள் மாணக்கடை."

இப்படிப்பட்ட மனையாளினும் பெறும்பேறு ஒருவனுக்கு வேறில்லை யென்று திருவள்ளுவநாயனார் மட்டுமன்று உண்மையையுணர்ந்த பெரியோர் எல்லாரும் சொல்லியிருக்கிறார்கள். யேசுகிறிஸ்து இவ்வுலகில் கடவுள் ஒருவனுக்கு அளிக்கக்கூடிய பெரும்பாக்கியங்களெல்லாவற்றிலும் கற்புடைக்காதலியை மனை

யாளாக அளித்தலினும் மேலானபாக்கியம் வேறில்லையென்று சொல்லியிருக்கிறார். அஃதையே திருவள்ளுவர் பின்வரும் குறளில் வெகு அழகாகச் சொல்லியிருக்கிறார் :—

பெண்ணிற்பெருந்தக்க யாவுளகற்பென்னும்
திண்மையுண்டாகப் பெறின்.

கற்பென்னுங் கலங்கா நிலைமையுண்டாகப் பெறின் ஒருவன் பெறுதற்குரிய பொருள்களுள் மனையாளிலும் உயர்வாகிய பொருள்கள் வேறு என்ன இருக்கின்றன? ஒன்றுமில்லை யென்றபடி. இப்படிப்பட்ட மனைவியைப்பெற்ற புருஷனுக்கோ சகல பாக்கியமுமானல் மனையாள் தூதி யென்னவென்று தற்காலத்தவர் பெண்ணுரிமை பெரிதென்று நாடி ஒரு கேள்வி கேட்கலாம். அவர்களுக்குப் பதில் இதோ கேண்மின் :—

"பெற்றார் பெறிற்பெறுவர் பெண்டிர்பெருஞ்
சிறப்புப்
புத்தேளிர் வாழுமுலகு."

பெண்டிர் தம்மைக்கொண்ட கணவனைப் பூசித்தல் பெறுவராயின் தேவர் வாழு முலகில் பெருஞ்சிறப்புப் பெறுவர் என்று சொல்லியிருக்கிறார்.

தன் மனையாளுடைய நற்குண நற்செய்கைகளே ஒருவனுக்கு நன்மையாமென்றும் அந்நன்மைக்கு ஆபரணம் நற்புதல்வரைப் பெறுதலென்றும் பொருள்பட,

"மங்கலமென்ப மனைமாட்சி மற்றதன்
நன்கல னன்மக்கட்பேறு"—

என்று கூறியிருக்கிறார். இப்படி இவ்வுலகில் அவனுக்குள்ள நன்மைகளெல்லாம் உருவெடுத்து வந்ததுபோலுள்ள நற்குண நற்செய்கைகளையுடைய மனையாளை ஒருவனிழக்க நேரிடின் அதிலும் தௌர்ப்பாக்கியம் அவனுக்குவேறில்லை. அதுவும் குழந்தைகளிருக்கின் அவன் கஷ்டத்துக்குச் சொல்லத்தேவையில்லை. பிறவிஞானியாகிய திருவள்ளுவநாயனாரே தம் இல்லறக்கிழத்தியாகிய வாசுகியம்மாள் தனக்கு முந்தி இவ்வுலகவாழ்க்கையைத் துறந்து சென்றபொழுது மனமுருகி இராத்தூக்கமின்றித் தவித்தாரென்றால் மற்றவர்கட்குக் கேட்பானேன். அவர் அச்சமயத்துப் பாடியபாடல் கல்லையு முருகச்செய்யும்.

"அடிசிற்கினியாளே யன்புடையாளே
படிசொற்கடவாதபாவா—யடிவருடிப்
பின்தூங்கிமுன்னெழுந்த பேதையேபோதியோ,
என்தூங்குமென்கணிரா."

பிறவிக்கியானியாகிய திருவள்ளுவரே இப்படிப் பெருந்துயிருற்றாரென்றால் மற்றவர்கள் ஞானிகளாகட்டும் அக்ஞானிகளாகட்டும் இப்பெரு நஷ்டத்தைப் பொறுத்தலரிதெனச் சொல்லவும் வேண்டுமோ? இத்துக்கம் பொறுத்தலரிதாயினும் இது நேர்ந்தபின் வருந்துவதிற் பயனில்லை யென்றுணர்ந்து தேறுவதே மெய்யுணர்வுடையார்க்கிலக்ஷணமாம்.

"நில்லாதவற்றை நிலையினவென்றுணரும்
புல்லறி வாண்மை கடை."

என்று சொல்லியிருத்தலால் இவ்விவேகத்தால் அத்துக்கத்தை அடக்கி வெல்லுதல் விவேகிகளுக்கழகாம். அன்றி ஊழ்வலிபெரிதாதலின் அதை வெல்ல யாராலாகும்.

"ஊழிற்பெருவலியாவுளமற்றொன்று
சூழினுந்தான் முந்துறும்."

விதிப்பயனாகிய ஊழ்வினை செய்யுங் கூத்து ஒரு விதத்தன்று.

"பேதைப்படுக்கு மிழவூழறிவகற்று
மாகலூழுற்றக்கடை."

இழத்தற்குக் காரணமாகிய ஊழ் உற்றகாலத்து ஒருவனுக்கு எல்லா அறிவும் உண்டாயிருந்தாலும் அதனை அறியாமையாக்கும்; அறிவு சுருங்கியிருந்தாலும் ஒன்று ஆதற்குக் காரணமாகிய ஊழ் பொருந்தியவிடத்து அவனது சுருங்கிய அறிவை அகற்றி விரியச்செய்து அவனுக்கு ஆகவேண்டிய காரியத்தை முடித்துவைக்கும்.

"நுண்ணிய நூல்பலகற்பினு மற்றுந்தன்
னுண்மையறிவே மிகும்."

ஒருவன் நுட்பமாகிய நூல்களைக்கற்றாலும் அவனுக்கு ஊழினாலாகிய அறிவே மிகும்.

ஊழின்வலிமிகுதியால்,

"நல்லவையெல்லாஅந் தீயவாந்தீயவு
நல்லவாஞ்செல்வஞ்செயற்கு."

ஆதலால் நம் மறிவு, செயல் இவைக்குமீறி நேரிடும் இன்பதுன்பங்கள் எவையோ அவை ஊழ்வலிநேர்ந்தனவென்றுணர்ந்து, அப்படிப்பட்ட இன்பம் நேர்ந்துழி உற்சாகமேலிட்டுப் பொங்காமலும், துன்பம் நேர்ந்துழி துக்கமேலிட்டுச் சோர்வடையாமலும், நடுவு நிலையாயிருந்து இன்ப துன்பங்களைச் சமமா யனுபவித்தல் விவேகிகளுக்கழகாம்.

"வகுத்தான்வகையல்லாற்கோடி
தொகுத்தார்க்குந்துய்த்தலரிது."

கோடிபொருளைச் சம்பாதித்தவர்க்குங் கடவுளமைத்த அமைப்பன்றி யனுபவித்தலரிது என்பதை வற்புறுத்திக்கூறி, ஊழ்வலியால் வரும் நன்மையை யனுபவிப்பதுபோல தீமையையு மனுபவிக்கவேண்டுமென்னும் கருத்தை வற்புறுத்தப் பின்வருமாறு கூறியிருக்கிறார்:—

"நன்றாங்கானல்லவாக்காண்பவரன்றுங்கா
லல்லற்படுவதெவன்."

ஊழை விலக்கநினைக்கின் அதுவே முன்னிற்கும் ஆதலால் அவ்வூழினும் வலியவையில்லையென்று தேர்ந்து அதை சமரசமாக அனுபவித்தலே யுக்தியாம். சுருதிகள்முறையிடுவதும் இதுவேயாம்.

---

காலஞ்சென்ற

## ஸ்ரீ லோகநாயகியம்மாள்.

I.

இப்பத்திரிகையை ஸ்தாபித்தவரும் இதன் ஆசிரியருமாகிய ம-ா-ா-ஸ்ரீ சி. வி. ஸ்வாமிநாதையருடைய தர்மபத்தினியும் பதிவிரதா சிரேஷ்டையுமாகிய ஸ்ரீ லோகநாயகியம்மாள் காலஞ்சென்ற விஷயம் மற்றோரிடத்தில் குறிக்கப்பட்டிருப்பதைக் காணலாம். அந்த அம்மாள் காலஞ்சென்றதினால் அவருடைய கணவரும் குழந்தைகளும் அடைந்த கஷ்டம் இப்பத்திரிகைக்குமுண்டென்பதை இதை வாசிப்போர் சாதாரணமாக அறியார். இப்பத்திரிகை ஸ்தாபிதமானமுதலில் இதற்குப் பொருளுதவிசெய்வதாக உறுதிவாக்களித்து ஒப்பந்தம் எழுதிக்கொடுத்தவர் முதற்சஞ்சிகை வெளிவந்தவுடன் அவ்வாக்கை நிறைவேற்றக்கூடாதவராக நேர்ந்ததை அவர் தெரிவித்தபொழுது, எடுத்த காரியத்தைத் தொடுபிடியாகத்தொட்டுநடத்த ம-ா-ா-ஸ்ரீ ஸ்வாமிநாதையர் செய்த முயற்சி இந்த அம்மாளின் அன்பாதரவான ஒத்தாசையின்றி பயன்பட்டிராதென்பது அவர் ஒருவருக்கன்றி அந்நியர் யாருக்கும் தெரிந்திராது. சரியாக 9-வருஷங்களுக்குமுன் அந்த அம்மாள் திரிகரணசுத்தியோடு அவருக்கு உபபலமாயிருந்துதவிசெய்தது அவருடைய வாழ்நாள் முடிவு பரியந்தம் தொடர்ந்துவந்தது. காலம் செல்லச்செல்ல புத்தியும் விவேகமும் மேலிட்டுவந்ததால் அந்த அம்மாள் அவருக்குண்மையான வாழ்க்கைத் துணையாகவிருந்து வந்தாள். இகம்பர மிரண்டிற்கும் ஒத்த வாழ்க்கைத்துணை அந்த அம்மாளைப்போல் கிடைப்பது துர்லபம். இதை அந்த அம்மாளின் கணவரைப்போல் அறிந்துளார் வேறு யாவருமில்லை. தம்பதிகளிருவரும் சென்ற ஒருவருஷகாலமாக வேதாந்த விசாரம் செய்துவந்தகாலத்தில் அவர்கள் அடிபணிந்து சற்குருமூர்த்தமாய்க் கொண்டாடிய மஹாத்மா ஒருவரன்றி மற்றவர்கள் அவ்வம்மணியின் உண்மை நிலையை உள்ளபடியறிந்திலர். சென்ற இரண்டு வருஷகாலமாக அவருடைய கணவர் தேகசௌக்கியமின்றியிருந்தகாலத்தில் பல தடவைகளில் அவருக்குப் பிராணபாயம் நேரிட்டு அற்புதமாக நீங்கியதெல்லாம் அந்த அம்மணியின் பிரார்த்தனை பலத்தாலன்றி வேறல்ல வென்று உண்மை

யறிந்தோர் உணர்வார். எப்பேர்ப்பட்ட துன்பம் வந்தகாலத்திலும் ஸ்வாமியிடத்தில் அந்த அம்மாளுக்குண்டாயிருந்த நம்பிக்கை குறைந்ததில்லை. அவர் பிழைத்த லரிதென்று தெரிந்தபின்னும் பிரக்ஞை தப்பிப்போகிற வரையிலும் அவர் அந்த நம்பிக்கைக்குக் குறைவின்றி ஸ்வாமியையே தியானம் செய்து கொண்டிருந்தார். வைத்தியர் கைவிட்ட பிறகும், இனி வைத்திய உதவியால் உடம்புதேற லாம் என்கிற நம்பிக்கையற்ற பிறகும் ஸ்வாமியினிடத்தில் வைத்த நம்பிக்கை சிறிதும் மாறவில்லை. "அவனால் ஆகாதது ஒன்று மில்லை. மஹாலக்ஷ்மி, சரஸ்வதி, மதுரை மீனாக்ஷி, கஞ்சிகாமாக்ஷி, காசிவிசாலாக்ஷி, திரிபுரசுந்தரி, மலைபோல் வந்ததெல்லாம் பனி போல் நீங்கவேணுமடிதாயே" என்று பிரார்த்திப்பாள். ஏதோ அற்ப உபாதிபோல் கண்டது, பிராரத்தவசத்தால் கோளாறுக்கிடமாகி சுவரத்தில் வந்துமுடிந்தது. சுவரங்கண்ட இரண்டொரு நாட்கழித்து ஜன்னிதோஷமிருக்கிற தென்று தெரிந்தது. மூன்றாம்நாள் டாக்டர் தேகஸ்திதி யிருப்பதைக்கண்டு கேஸ்பிரயாத மென்று கண்டுகொண்டார். நாலாநாள் புதன் கிழமை யன்றிராத்திரி தன்னிலை அபாயகர மானதென்று பிணியாளி தானே தெரிந்து கொண்டாள். அதுமுதல் அந்த அம்மாளுக் குண்டான சாந்தமும், நிதானமும், ஸ்வாமித் தியானமும் மிக அற்புதமாயிருந்தது. அவர் வாய்ப்பிறப்பாகவந்த வார்த்தைகள் மிக உண்மையாகவும் காலதேசவர்த்தமானங்களுக்குப் பொருந்தியவாகவுமிருந்தன. அன்றிராத்திரி 2-மணிக்கு தேகோபாதி மிக அதிகமாயிருக் கிறதென்று சொல்லி, தன்கணவரைத் தன் னைவிட்டுப் பிரியாது கிட்ட விருக்கச்சொல்லி, உடனே டாக்டருக்கு ஆள் அனுப்பச்சொன்னார். காலை 6-மணிக்குள் டாக்டர்வர சந்தர்ப்பப்படாமற்போக, கபம் கட்டிக்கொண்டு மூச்சுத்திணறுவதற்காரம்பிக்க, உடனே வாந்தி செய்தால் இவ்வுபாதி சாந்தமாகுமென்று வாயில் விரலிட்டுக்கொண்டு கபத்தைக் கழித்து வந்தார். டாக்டர் வந்தவுடன் கபங்கழிய வாந்தி செய்யவேண்டுமென்று சொல்ல, அவர் அந்தம்மாளின் நிலைமை மிகவும் அபாயகரமா யிருப்பதைக்கண்டு, கபத்தை யுடனே கேட்கும்படியான அபூர்வ மாத்திரை யொன்று அவர் சிநேகிதர் ஒருவரிடத்திலிருப்பதை நினைத்து அவருக்கு உடனே சொல்லியனுப்பினார். அம்மருந்து சாப்பிட்டதினால் இரண்டு மூன்றுதரம் வாந்திசெய்து கபங்கழிய உபாதி சாந்தப்பட்டது. மூச்சுத்திணறலும் நீங்கிற்று. அன்று மத்தியானம் அதிக உற்சாகமாக விருந்தார்; ஆனாலும் பிணியாளி தன் அபாய நிலையை யுணரத் தவறவில்லை. அன்று மத்தியானத்துக்குமேல் தேகத்தில் அசதி மிகுதி யாவதை யுணர்ந்து "இந்த வியாதி தெய்வானுக்ரகத்தால் சொஸ்தமானால் ஆகவேண்டுமேயன்றி மனுஷ யத்தனத்தால் ஆவதாகத் தோற்றவில்லை. ஏதோ ஸ்வாமியின் தலையில் பாரத்தைப்போட்டுவிட்டு அவரையே கதியாக நம்பியிருக்கிறோம். அனுகூலப்பட்டாலாயிற்று; அப்படிக்கின்றி தீராப்பொறியாக நேரிட்டால் வந்ததை யனுபவிக்கிறதுதான்! வேறு என்னசொல்லுவேன்" என்று கணவரைநோக்கி அங்கலாய்த்தாள். அவர் கண்கள் கலங்க, உடனே தன்மனதைத் திடப்படுத்திக்கொண்டு, "அதைரியப்படாதேயுங்கள்: நான் எவ்வளவோ தைரியமாயிருக்கிறேன்; நீங்கள் அவ்வளவுதைரியமாகவில்லையே. எல்லாவற்றிற்கும் ஸ்வாமியிருக்கிறார்" என்று சொல்லி வார்த்தையை மாற்றினார். அன்று முதல் 5-நாள்பரியந்தம் தன்னுடைய மனோ திடத்தினாலும் கடவுளிடத்தில் தான்வைத்த அபார நம்பிக்கையினாலுமே, அந்தம்மாள் வர வர பலவீனப்பட்டு வந்தாலும் நிதானம் தப்பாமல் திடபாவத்தால் வியாதியை யெதிர்த்துப் போராடிவந்தார். அவர் காயலாவாக விழுவதற்கு இரண்டுவாரம் முந்தி அவர் தாய்வீடு போயிருந்த காலத்தில் கைக்குழந்தைக்கு மார்தம்வந்து திடீரென்று பிராணாபாயம் நேரிடும் போலிருந்ததால், அந்த சமயத்தில் தக்க

உதவியின்றி தனியிருக்க நேரிட்டதில் மனம் திடுக்கிட்டு நரம்புகள் வலுக்குறைந்து தேகம் மிகவும் நலுக்குற்றிருந்தார். அதனால் தேகத்தில் ஏற்கனவே சக்தி குறைந்திருந்ததால் வந்த விஷசுரத்தை முற்றும் தாங்குவதற்கு தேகத்தில் போதுமான சக்தியில்லை. தேக சக்தியில்லாததினால், அவருடைய அபாரமான தெய்வபக்தியினாலுண்டான மனோதிடத்தினாலும் திடபாவத்தினாலுமுண்டான சாதகம் முடிவில் பயன்படுவதற்கின்றிப் போய்விட்டது. முடிவிற் பயன்படாமற் போயினும், பலஹீனம் மேலிட்டபோதெல்லாம் அதைத்தள்ளித் திடபாவத்தால் நிதானம் தவறாதிருந்து வந்தார். வெள்ளிக்கிழமை இராத்திரி தேகஸ்திதி குறைவுபட்டுவர விடியற்காலம் அந்திய காலம் கிட்டிவிட்டதுபோலிருந்தது. அப்பொழுதும் அந்தம்மணி அதைரியப்படவில்லை. தம் கணவரை யழைத்துக் கிட்ட விருத்திக் கொண்டு அவர் பூணூலைப் பிடித்துக்கொண்டு "நீங்களும் நானும் ஒன்று: நான் உங்களை விடமாட்டேன்" என்று அவரை யணைத்துப்பிடித்துக்கொண்டிருந்தார். விடியற்காலம் 5-மணி சுமாருக்கு ஏதோ நிலைதடுமாறுவதுகண்டு, "ஓம்" என்கிற பிரணவ மந்திரத்தை யுச்சரித்து, காயத்ரி மந்திரத்தையும் வாயார உச்சரித்தார். உச்சரித்துத் தம்கணவரைநோக்கி அம்மந்திரங்களைத் தம் காதுகேட்க உச்சரிக்க வேண்டிக்கொண்டார். பிறகு "பஜகோவிந்தம்" என்று கோவிந்த பஜனை செய்யச்சொன்னார். பிறகு "ஓம் நமோநாராயணாய" என்னும் மந்திரத்தைச்சொல்லி பஜிக்கச்சொன்னார். அவர் சொல்லுவது மெதுவாகவிருந்து காதில் விழாதபொழுது உரத்துச் சொல்லச்சொல்வார். இப்படிச் சிலநேரம் கழியவும் "நமச்சிவாய வாழ்க நாதனடிவாழ்க !, இமைப்பொழுதும் என்னெஞ்சி னீங்காதான் தாள்வாழ்க" என்னும் தோத்திரத்தை அவர் தாமேயாகப் பாடினார். இன்னும் வேதாந்தமான பாட்டுகள் பல பாடினார். தோத்திரங்களும் பாடினார். ஆவடையாரம்மாள் பாடிய ஞானப்பாட்டுகளைக் கேட்பதிலும் அவைகளிற் சில வற்றைத் தாமே பாடுவதிலும், அந்தம்மாளுக்கு மிகப்பிரியம். அப்பொழுது அவர் பாடிய பாட்டுகளில் "எப்படி யிருந்தாலென்னெனக்கினி, எப்படி யிருந்தாலென்" என்கிற பல்லவியுள்ள பாட்டை முழுவதும் பாடினார். அந்தபாட்டு அவர் பொறுக்கித்திரட்டி யெழுதிவைத்த பாட்டுகளில் ஒன்று. அதை விவேக சிந்தாமணியின் மே மாசத்துச் சஞ்சிகையில் பிரசுரித்திருக்கக் காணலாம். அந்த அம்மாள் அதை அவர் கணவருக்குத் தெரிந்தெடுத்துக்கொடுக்க அப்பாட்டு அவரால் விவேக சிந்தாமணியிற் பிரசுரிக்கப்பட்டது. அதைப் பிரசுரித்தகாலத்தில் அந்த அம்மாள் அதைப் பாடிக்கொண்டு கூண்டிலடைத்த கிளி கூட்டைவிட்டுப் பறந்தோடினதுபோல் தம் காயத்தைத் துறந்து இப்படி யோடிவிடுவாரென்று அவர் சிறிதும் நினைக்கவில்லை. நாமொன்று நினைக்கத் தெய்வமொன்று நினைப்பது சகஜந்தானே. இன்னும் திருவாசகத்தில் அனேக பாடல்களை யங்கங்கே யெடுத்துப் பாடினார். இங்கே, அவர் திருவாசகத்தைத் தினந்தோறும் விநாயகர்பூஜை முடித்துப் பாராயணம்செய்து வந்ததன்றி ஒழிந்த வேளைகளிலெல்லாம் அதை யெடுத்து வைத்துக்கொண்டு மனங்கரைய வாசித்து ஆறுதலடைவது வழக்கமென்பதைச் சொல்லுவது ஒக்கும். பகவத்கீதையையும் அப்படியே பன்முறை வாசித்து முடித்துளார். உபநிஷத்துக்களின் முக்கிய பாகங்களையும் வாசித்து உள்ளர்த்தத்தைக் கிரகித்துளார். கைவல்யமுழுக்க நன்றாகத்தெரியும் தாயுமானவர் பாடல் பட்டணத்துப்பிள்ளையார் பாடல்களுமப்படியே. அன்றி ரிபுகீதை முழுக்க வாசித்து அதினுள்ளர்த்தத்தை யுணர்ந்து பாராயணம் செய்திருக்கிறார். மற்றப்படி சில்லறையாகவுள்ள வேதாந்தபுஸ்தகங்கள் பாடல்களெல்லாம் வாசித்துளார். கடைசியில் வேதாந்த விசாரம் செய்து தெரிந்துக்கொள்ள வேண்டியது ஒன்றுமில்லாவிட்டாலும் பூர்ணானுபவம் சித்திக்கும்

பொருட்டு மனதாலறிந்ததை விடாது மனனம் செய்து நிதித்தியாஸனம் செய்யும்பொருட்டு வேதாந்த புஸ்தகங்களை விடாது வாசித்து வந்தார். தத்துவ ஞானம் சித்தித்து வாஸனுக்ஷயம் மனோலயம் இவை கைகூடும் பொருட்டு சதா அப்பியாஸம் செய்துவந்தார். மறுநாளும் அடுத்த நாளும் வியாதி மருந்திற்பிடிபடாமலே அனுகூலம்போல் தோற்றிப்பிரதிகூலம் காட்டிவந்தது. இந்தக்காலங்களில் சதா ஸ்வாமியையே தியானம்செய்து வந்தார். டாக்டர் குறிப்பிட்டுக்கொடுத்தபடி ஔஷத ஆகாரங்கள் மணி தப்பாமல் சாப்பிட்டு ஸ்வாமியின்பேரில் பாரத்தைப்போட்டு வந்தார். இப்படி ஐந்தாறு நாள்கள் கழிந்தன. ஞாயிற்றுக்கிழமையதினம் மத்தியானம் ஆவுடையாரம்மாள் பாட்டுகளெல்லாம் மனப்பாடம் பண்ணியுள்ளவரும், சதா அவருக்கு அப்பாட்டுகளைப்பாடி, பலவற்றைப்பாடவும் கற்றுக்கொடுத்து, மற்றப்படி வேதாந்த விசாரம் செய்வதில் முதலில் வழிகாட்டியாகவும் பிந்தி சகாவாகவு மிருந்த அம்மணி ஊரிலிருந்து வந்து அவரைப்பார்க்க வந்தார். அப்பொழுது அந்த அம்மணியோடு சாதாரணமாகப் பேசிக்கொண்டிருந்து, தமக்குப்பிரியமான சில பாட்டுகளைப் பாடச்சொல்லிக் கேட்டார். அந்த அம்மாளைக்கண்டால் உற்சாகப்படும் அவர் அதிசாந்தமாகவும் சாமான்யமாகவும் அவரோடு பேசிவருவதேன் என்று கேட்டதற்கு "இப்பவும் சந்தோஷந்தான். 6-நாளாக சுரம், ஆகாரம் இல்லை. ஆதலால் உற்சாகத்தைக்காட்ட தேகத்தில் பலமில்லை. மனதுக்குள் சந்தோஷந்தான்" என்றார். இன்னும் மற்றப்படி கேட்டகேள்விகளுக்கெல்லாம் நிதானமாகவும் கேட்டதற்குக் கேட்ட அளவு சரியாகவும் பதில் சொல்லிவந்தார். இதற்குமுன் வெள்ளிக்கிழமையதினம் விநாயகர் பூஜைசெய்யச் சொல்லி சாயங்காலம் வழக்கம்போல கற்பூர ஆராத்தியெடுத்துக்காட்ட அவருடைய குருவின் படத்தைப்பார்த்து வாங்கி முகத்தில் ஒத்திக்கொண்டு நெற்றியில் வைத்து சில நேரம் தியானம்செய்துகொடுத்தார். ஞாயிற்றுக்கிழமை இராத்திரி 11-மணிக்கெல்லாம் உபாதியதிகமாயிற்று. உபாதியதிகமானபோதெல்லாம் "ஓம்" என்கிற பிரணவ சப்தத்தையுச்சரித்து காயத்ரி மந்திரத்தையும் உச்சரிப்பது வழக்கமாயிருந்தது. அதுபோல் அன்றைக்கும் 'ஓம்', 'ஓம்' என்று சொல்லி, காயத்ரிமந்திரத்தை முழுதும் உச்சரித்தார். பிறகு விநாயகர் பூஜை பண்ணவேண்டுமென்று சொல்ல, அவர் பூஜை பண்ணிவந்த விநாயகரைக்கொணர்ந்து காட்டி, அதற்கு கற்பூர தீபாராதனை யெடுக்கத் தரிசித்தார். அப்பொழுது கிட்டவிருந்த தீபத்திலிருந்து பூவுதிர்ந்தது. இந்த நற்சகுனத்தைப்பார்த்துக் கிட்டவிருந்தவர்கள் கடைசியில் அவர் தெய்வானுக்ரகத்தால் பிழைத்துப்போவாரென்று மனதில் எண்ணங்கொண்டு திடப்பட்டார்கள். உடனே, அவர் பக்திமேலிட்டு ஸ்வாமியைத் தியானம் செய்ய ஆரம்பித்தார்.

*சிவசிவ சிவசிவ சிவராஜா!*
*சிவகாமிப்பிரிய நடராஜா!*

என்று பலதரம் சொல்லி பகவன்னும ஸ்மரணைசெய்தார். பிறகு "சிவசிவசிவசிவ" என்று பலதரம்சொன்னார். "ஓம் சத்தியமே நம்பினேன்" என்றார். இடை இடையே கண் வந்து மூடும்போது ஸ்வாமியை மறந்துவிட்டேன் என்று சொல்லி வருத்தப்படுவார். உடனே "ஸ்வாமி, ஸ்வாமி, ஸ்வாமி, ஸ்வாமி," யென்று பலதரம் ஸ்வாமியை பஜிப்பார். "சத்தியமே சரணம்" என்று சொல்லி, எட்டுநாளாகப் பூஜைசெய்யாததற்காக வருத்தப்படுவார். உடனே "நான் ஒருத்தருக்காகப் பூஜை செய்யவில்லை; நான் ஒருத்தருக்காக ஒன்று செய்யவில்லை" என்று சொல்லி "சூரியநாராயணா உனக்கே அற்பிதம்" என்றார். "சொல்லுவதறியேன், வாழி! முறையோ" என்று மாணிக்கவாசகர் சொல்லியதுபோல "ஸ்வாமி, ஸ்வாமி, கிஷ்ணா, கிஷ்ணா, ஸ்வாமி விக்நேசுவரா, விக்நேசுவரா" வென்று பலமுறை ஸ்மரித்து "ஸ்வாமி எனக்கு ஒன்றும் சொல்லத்

தெரியவில்லையே, ஒன்றும் தெரியவில்லையே" என்று சொன்னார்.

"பிழைத்தவை பொறுக்கை யெல்லாம்
பெரியவர்கடமை போற்றி!"

என்றார்போல, "ஸ்வாமி! என்னபிழை செய்தாலும் பொறுத்துக்கவேணுமென்று ஒரு தரத்திற்கு ஆயிரம் தரமாகக் கேட்டிருக்கிறேன். ஒரு தரத்திற்கு ஆயிரம் தரமாகக் கேட்டுக் கொண்டிருக்கேன்"......என்று சொல்லி தன்னிடத்தில் இவ்வளவவ்வளவு அகம்பாவ மிருந்ததை யெடுத்துச்சொல்லி, ஸ்வாமி யென்னைக் கரையேற்ற வேண்டுமென்று பிரார்த்தித்துக் கொண்டார். பிறகு "இரண்டு மூன்று வெள்ளிக்கிழமையாக கோவிலுக்கு ஒன்றுக்கும் போகவில்லை; ஸ்வாமி, ஸ்வாமி யென்று ஒன்றும் சொல்லவில்லை; மருந்தைத்தின்று கொண்டு உட்கார்ந்திருக்கிறேன்" என்று துக்கித்தார். இராத்திரி 12-மணிக்கு "மாயையைப்போக்கி மனதை வெளியாக்கவேணும்" என்றார். "பாதி இராத்திரியிலேகூட அநாதரக்ஷகா ஆதிமூலமே யென்று சொல்லிக்கொண்டிருப்பேன். நீங்கள் வேண்டுமானல் கூப்பிட்டுக் கேளுங்கள்." "இதெல்லாம் ஒருத்தருக்காகவா என்ன" "கேளாய் என் துறையை: இதுதான் எனக்குச் சொல்லத்தெரிகிறது வேறு ஒன்றுமில்லை." இந்த வார்த்தைகளெல்லாம் கண்ணை மேலிட்டு அயர்ந்து ஒடுங்கியும், தலை தடுமாறியுமிருந்த வேளைகள்போக இடையிடையே சொன்னவைகள். விடியற்காலம் அம்மன் வந்து இருகையிலும் தாழம்பூவைக் கொடுத்து மங்கிலியத்தோடு அழைத்துப் போவதாகச்சொல்வதாகவும் தான் சீக்கிரம் போகவேண்டுமென்றும் சொல்லி குழந்தைகளைக் கூப்பிட்டு எடுத்தணைத்து முத்தமிட்டு பால் கொடுத்துத் தடவிக்கொடுத்து தன் பர்த்தாவைக் கூப்பிடும்படி சொல்லினர். அதுவரையில் விழித்திருந்து அரைமணிமுன் தான் பக்கத்திலிருந்து அயர்ந்து கிடந்த அவரை உடனே யெழுப்ப அவர் ஓடிவந்தார். அந்த அம்மணி அவரை அன்போடு ஆவலாயணைத்துக் கழுத்தைக் கட்டிக்கொண்டு "என் கண்ணே, செல்வமே,......நான் என்னசெய்வேன். எனக்கு ஒன்றும் சொல்லத்தெரியவில்லையே. அந்நியோந்நியமாய் மிகவும் நேசமாய் ஒன்று பட்டிருக்கிற அகமுடையான் பெண்டாட்டி என்ன சொல்வாள்?......... உன்னை விட்டுவிட்டுப்போகிறேனே, நீயும் நானும் ஒன்றுச்சே" என்றார். அவர் கணவர் என்றும் அநித்தியமாகிய இந்த ஜடதேகம் விழுந்துபோவதால், அவர்கள் ஒற்றுமைக்கு ஒருபோதும் குறைவுவராதென்று ஆத்மசொருபத்தை யெடுத்துக்காட்டி ஆத்ம ஐக்கியம் அழிவற்றதென்று சொல்ல, அவருடைய வார்த்தையை யங்கீகரித்து அந்த அம்மாள், "ஆம், அது உண்மை. நீயும் நானும் ஒன்றே. உனக்குள் நான் எனக்குள் நீ. நாம் அழியாத வஸ்து. சரஸ்வதி, மஹாலக்ஷ்மி, கஞ்சி காமாக்ஷி, மதுரை மீனுக்ஷி மலைபோல் வந்ததெல்லாம் பனிபோல் நீங்கவேணும். நான் எங்குபோனுலும் உங்களை விட்டுப் பிரியக்கூடாது," என்று சொல்லி, சற்றுக்கழித்து மறுபடியும் அவர் கணவரைக் கட்டியணைத்து முகத்தோடு முகம்நெறிய முத்தமிட்டு, "எது சத்தியமோ அது நாம்; எது உண்மையோ, எது ஆனந்தமோ, எது அசைவற்றதோ அது நாம். மதுரை மீனுக்ஷி, கஞ்சி காமாக்ஷி...எது சத்தியமோ அது நாம். வாசுதேவா உன்னையே நம்பினேன். உன் பாதாரவிந்தத்தையே நம்பினேன். இன்னம் 5-நிமிஷம்" என்றார். அப்பொழுது திருவாசகம் ஆனந்தமாலையை யெடுத்து வாசிக்க "அம்மா தெருஞ்சுதடி" யென்றார். பின்னும் ஒரு நிமிஷத்துக்கெல்லாம் ஸ்வாமியை ஸ்தோத்திரம் செய்து "எங்கேபோனுலும் உன்னைவிட்டுப் பிரியப்படாது என்று சொன்னேன்" என்றார். பிறகு "ஏகமயமானவனே..." என்று ஸ்வாமியை ஸ்தோத்திரம் செய்தார். "எனக்குக் கேட்கத்தெரியவில்லை: நான் ஸ்வாமியைப் பார்த்துக் கேட்டுக்கிறேன்" என்றார். "சத்தியமே உன்னை நம்பினேன்" "சத்தியமே சா

ணம்". "வாஸுதேவா உன்னையே நம்பினேன். உன் பாதாரவிந்தத்தையே நம்பினேன்" என்று வாய்க்குள் முணுமுணுத்துக்கொண்டிருக்கையிலே பேச்சடங்கிவிட்டது. பிரக்ஞைதப்பிப்போய்விட்டது. விடிந்ததும் அமாவாசையாதலால் அன்றைப்பொழுது போனால் பிழைத்துவிடுவாளென்று பிரக்ஞையற்றிருப்பதை மேற்கொண்டு வைத்திய சாஸ்திரத்திற் கண்ட அதி நூதன உபாயங்களையெல்லாம் உபயோகித்துப் பிராணன் தேகத்தைவிட்டுப் பிரியாமற் காப்பாற்றிவந்தார்கள். மனுஷனுடைய முயற்சி யெந்தமட்டும் செல்லும். தெய்வசங்கற்பம் வேறாயிருந்தது. மருந்தின் வேகமடங்கினதும், முகம் சாந்தப்பட்டு, யாதொரு உபாதியங்கியில், சிரமப்பட்டுக் களைத்துப்படுத்து இளைப்பாற உறங்குவோர் வாய்ப்பிறக்கும் வார்த்தைகளான "அம்மா, அம்மாடி" யென்கிற களைதீர்க்கும் வார்த்தைகளைத்தவிர வேறு வேதனை வார்த்தைகளின்றி மங்களவாரத்தன்று இராத்திரி கூடத்திருந்த கடியாரம் கணீர் கணீரென்று 11-மணியடிக்கத்துவக்கவும் கடைசிமூச்சு நின்றது. ஸ்ரீலோகநாயகியம்மாள் அவள் உலகவாழ்க்கையை முடித்து அவள் வாயாற்சொல்லியபடி "எது உண்மையோ, எது ஆனந்தமோ, எது அசைவற்றதோ, அது" வானாள்.

"சங்கரா, போற்றி! மற்றோர் சரண் இலேன்
போற்றி!"

யென்றும்,

நமச்சிவாயவாழ்க! நாதன்றாள்வாழ்க!
இமைப்பொழுதும் என்னெஞ்சினீங்காதான்
தாள்வாழ்க!

என்றும் வாயாறப்பாடி நாவாறத் துதித்த அவள்,

"தரிக்கிலேன் காயவாழ்க்கை, சங்கரா,
போற்றி! வான
விருத்தனே, போற்றி! எங்கள் விடலையே,
போற்றி! ஒப்பில்
ஒருத்தனே, போற்றி! உம்பர்தம்பிரான்,
போற்றி! தில்லை
நிருத்தனே போற்றி! எங்கள் நின்மலா,
போற்றி! போற்றி!"

என்று அவனது காருண்யக்கடலில் மூழ்கி, சமுத்திரத்தைச்சேர்ந்த நதிபோல் கலந்துபோய்விட்டாள். அன்பே உருவாயவதரித்தாட்கொண்டதுபோல், அந்தம்மணியை வாழ்க்கைத்துணையாகக்கொண்டு அவரது இன்னுதவியோடும் இந்தப் பிறவிக்கடலைக் கடக்க முயற்சித்துவந்த அவர் கணவர் என்ன செய்வர்! திருவள்ளுவரைப்போல் தூக்கித்தாலும் அவர்பரங்கருணையைப் போற்றியிரங்குதலன்றி வேறொன்று செப்பவறியாது மயங்குகின்றார்.

"போற்றியோ! நமச்சிவாய! புயங்கனே
மயங்குகின்றேன்.
போற்றியோ! நமச்சிவாய! புகலிடம்
பிறிதொன்றில்லை.
போற்றியோ! நமச்சிவாய! புறம் எனைப்
போக்கல்கண்டாய்.
போற்றியோ! நமச்சிவாய! சயசய,
போற்றி! போற்றி!"

---

"இழித்தனன் என்னையானே; எம்பிரான்
போற்றி! போற்றி!
பழித்திலேன் உன்னை, என்னை ஆளுடைப்
பாதம் போற்றி!
பிழைத்தவை பொறுக்கை எல்லாம் பெரியவர்
கடமை, போற்றி!
ஒழித்திடிவ் வாழ்வு, போற்றி! உம்பர்நாட்
டெம்பிரானே!"

---

"ஒருவனே, போற்றி! ஒப்பில் அப்பனே,
போற்றி! வானோர்
குருவனே, போற்றி! எங்கள் கோமளக்
கொழுந்து போற்றி!
வருகஎன் றென்னை நின்பால் வாங்கிட
வேண்டும், போற்றி!
தருகநின் பாதம், போற்றி! தமியனேன்
தனிமைதீர்த்தே."

---

"போகம் வேண்டி வேண்டிலேன் புரந்தராதி
இன்பமும்,
ஏக! நின்கழலிணை அலாதிலேன், என்
எம்பிரான்!

ஆகம் விண்டு, கம்பம், வந்து, குஞ்சி அஞ்ச
லிக்கணே
ஆக என்கை கண்கள் தாரை ஆறதாக ஐய
னே!"

"ஈசனே! நீ அல்லதில்லை, இங்கும் அங்கும்,
என்பதும்
பேசினேன் ஓர் பேதம் இன்மை பேதையேன்;
எனெம்பிரான்!
நீசனேனை ஆண்டு கொண்ட நின்மலா! ஓர்
நின் அலால்
தேசனே! ஓர் தேவர் உண்மை சிந்தியாது
சிந்தையே."

ஆத்மபந்து.

---

II.

ஒரு தோழியின் மதிப்பு.

## காலஞ்சென்ற ஸ்ரீ லோகநாயகி அம்மாள்.

அந்த அம்மணியின் தோழி யொருவர் எழுதுகிறார்:-

இந்த விவேகசிந்தாமணியை வாசிக்கும் எனது ஸகோதரிகளே,

இப்போது என் மனதினுள் அடைத்துக் கொண்டு இருக்கும் வலியைப்போன்ற அடைப்பை, என்னுடைய வாயைத்திறந்து சொல்லமுடியாமற்போனாலும், இப்பத்திரிகைக்காவது எழுதி மனதை ஒருவாறு ஸமாதானம் செய்துக்கொள்ளலாம் என்று உத்தேசித்து எழுதலானேன்.

ம-ா-ா-ஸ்ரீ, ஸாமிநாதய்யர் மனைவி ஸ்ரீ லோகநாயகி அம்மாள் (அதாவது விவேகசிந்தாமணி பத்திராசிரியர் மனைவி) இறந்துவிட்டாள் என்கிறசெய்தி எனக்கு எட்டியது. அந்தக்கடிதம் பார்த்ததுமுதல் என்னுடைய மனம் பதைக்கின்றது. வருத்தம் தாங்க முடியவில்லை.

நான் முதல், முதல், சிநேகம் என்ற கரும்பை ருசிகண்டது இந்த அம்மாளுடன் பழகித்தான். சுமார் 10-வருஷங்களுக்குமுன் இவரோடு சிநேகம் செய்துகொண்டேன். இதுவரையிலும் எனக்கு சிநேகித்துக்குக் குறைவுவந்ததில்லை. சிநேகத்தினுடைய குணம் யாவற்றும் இந்த அம்மாளிடத்தில் உண்டு. முதலாவது பெருமை, கருவம் கிடையாது. ஸாதாரணமாக நல்ல ஸ்வபாவமும், நல்ல குணங்களும், இந்த அம்மாளிடத்தில் உண்டு.

நானும், அந்த அம்மாளும் வெகு ஸந்தோஷமாகவும் வேடிக்கையாகவும், அவருடன் விடாமல் சுமார் இரண்டு வருஷம்போல் காலம் கழித்துவந்தோம். அப்பொழுது நாங்கள் பார்த்தவை கேட்டவற்றைப் பத்திரிகைக்கு எழுதி அனுப்புவோம். அவர் புருஷனுக்குச் செய்கிற உதவியும், அவர் ஸௌகரியத்தைப் பற்றியமாதிரி நடக்கிறதும் வெகு ஆச்சரியமாக இருக்கும்.

அந்த அம்மாளுடன் பழகினதில் அனேக நல்லமாதிரிகளைக் கற்றுகொண்டேன். புருஷனுக்கு வெகு அன்பாக அவர் இஷ்டம்போல் நடப்பார். வெகு நல்லபெண். சூது, கபடம், ஒன்றும் தெரியாது. பரமார்த்தம்.

அய்யோ! எனது அருமைத்தோழியை எப்போது காண்பேன்! இப்போதுதான் அவரைக் கடைசியாக இரண்டுமாதத்துக்கு முன் பார்த்தேன். எவ்வளவு பக்ஷமாக இருந்தார்! எவ்வளவு அன்பாய்க் கொண்டாடினர்! அய்யோ! திடீரென்று எங்களைப்பிரித்து, கடவுள், இப்படி அநியாயமாக அழைத்துக் கொண்டு விட்டாரே! ஆகா! என்ன ஆச்சரியம்!

கொஞ்சகாலமாக இந்த அம்மாளுடைய மனதை பக்தியில் செலுத்திவிட்டார். அதாவது பூஜை, ஜபம், இதெல்லாம் செய்து கொண்டு அவர் கணவரோடு வேதாந்தவிசாரம் செய்துவந்தார்.

நான் இவரைக் கடைசியாகப் பார்த்தபோது இப்படி ஞானவழியில் இருக்கிறதைப்பார்த்து பரிகாஸஞ்செய்தேன்.

அந்த அம்மாள் செய்ததைப்பார்த்தபோது எனக்கு சிரிப்புவந்தது. அப்போது என்னைப் பார்த்து அந்த அம்மாள் சொன்னதாவது:—

"என்னடி சீதா, சிரிக்கிறாயே; நீ முன்போல் குழந்தைத்தனமாகவே யிருக்கிறாயே ஒழிய போகிறவழிக்கு ஒன்றும் வேண்டாமா! இன்னமும் குழந்தைத்தனம் விடவில்லை; அதினால் கேலிசெய்கிறாய். இந்த ஞானம் வந்தவழியைச்சொன்னால் சிரிக்கமாட்டாய். நீயும் என்னைப்போல்செய்ய இஷ்டப்படுவாய்" என்று இன்னும் சில வார்த்தைகள் சொன்னாள். என்னுடைய மனம், அந்த ஞானவழியைக் காணாதபடியால், அவர் சொல்லச் சொல்ல, அலாத்தியமாக பயித்தியத்தைப் போல் சிரித்துக்கொண்டு நின்றேன்.

இன்னும் இந்த அம்மாளைப்பற்றி எழுத அனேகம் இருக்கின்றது. இப்போது ஸாத்தியப்படவில்லை.

இந்த அம்மாளுக்கு 5-வயதான ஒரு பெண்ணும், ஒரு வயதுள்ள ஒரு பிள்ளையும் இருக்கிறார்கள்.

குழந்தைகளையும், அவர் கணவனாரையும் விட்டு, சிநேகிதர்களையும் விட்டுவிட்டு ஓடி மறைந்துவிட்டார்!!

இழந்துவிட்டேன்! எனது பிராண சிநேகிதியை!! அடி அம்மா! எங்கொளித்தாய்! இனி எங்குகாண்பேன்!!

அய்யோ நீ செய்திருக்கும் நன்றிகளை மறவேன். உனக்கு ஜகதீசன் மோக்ஷத்தைக் கொடுக்கவேணும். என்னம்மா! இதோ உன்வாழ்நாட்களைக் கழித்துவிட்டாய்! இனி என்வாழ்நாளும், நீ போயிருக்கும் இடத்திற்குப் போகவேண்டும் என்பதை ஸதா நினைத்துக்கொண்டிருக்கிறேன்.

---

EXTRACT.

## இல்வாழ்க்கை. *

(FROM A CHRISTIAN POINT OF VIEW.)

(BY A MISSIONARY).

கிறிஸ்துவானவர் போதித்த சன்மார்க்கோபதேசத்தை யனுசரித்து கிறிஸ்துமத போதகரான ஒருவர் இல்வாழ்க்கையின் இயல்பைக் குறிப்பிட்டு ஒரு துண்டுப்பத்திரமெழுதிப் பிரசுரித்திருக்கிறார். இது சர்வமத சம்மதமாய் சத்தியமார்க்கானுசாரமாக நாம் அதே விஷயத்தைப்பற்றி இப்பத்திரிகையில் சொல்லியுள்ளவற்றிற்குப் பொருந்தினதாக விருப்பதால் கிறிஸ்துமத போதானுசாரமாக இது விஷயத்தைப்பற்றி அவர் எழுதியிருப்பதை இங்கெடுத்து அச்சிட்டிருக்கிறோம். அது பின்வருமாறு:—

"இவ்வுலகின்கண் அதமர், மத்திமர், உத்தமர் என மூவகை மக்கள் வசிக்கின்றனர். இவர்கள் தங்கள் மனதில் சமாதானத்தைப் பெற்று வாழவிரும்பி, பல முயற்சிகள் செய்துவருவது யாவருக்குந் தெரிந்த விஷயமேயாம். அவற்றில் ஒன்று விவாகமென்று சொல்லத்தகும். அழகு, ஐசுவரியம், அந்தஸ்து, கல்வி, நன்னடக்கை, தேவபக்தி ஆகிய இவ்வாறும், விவாகஞ் செய்துகொள்ளுகிறவர்களுக்கெல்லாம், பொதுவாய் இன்றியமையாமலிருக்கவேண்டியவையாயிருந்தும், அவற்றில் அதமர் முக்கியமாய் அழகையும், ஐசுவரியத்தையும், மத்திமர் அந்தஸ்தையுங், கல்வியையும், உத்தமர் நன்னடக்கையையுந், தேவபக்தியையும் விரும்புகின்றனர். இம்மூவரில் உத்தமர் விருப்பமே சிறந்தது. அதுவே மனோபாக்கியமாகிய சமாதானத்தைக் கொடுக்கக்கூடியதென்று அறிஞருங் கூறுகின்றனர். எவ்வாறெனில்:—

"நன்னடக்கைகளாகிய சுத்தம், சுறுசுறுப்பு, உண்மை, கீழ்ப்படிதல், பொறுமை முதலிய

* From a Tract published by Mr. P. S. D. Muthusawmy Pillay, Missionary of the S. I. Baptist Mission, Bangalore.

பஞ்ச இலட்சணங்களையுந் தேவதாபக்தியென்னுஞ் சரட்டிற்கோர்த்து, அணிந்திருக்கும் ஸ்திரீயை யெவனொருவன் தனக்கு இல்வாழ்க்கைத் துணைவியாகக் கொள்ளுகின்றானோ, அவனே பாக்கியவான். இதைக் கருதியே "எரு பிடித்துழுகிறவன் என்ன செய்வான், படிபிடித்தளக்கிறவள் பாக்கியம்" என்னும் பழமொழியும் உலகத்தில் பிரசித்தமாய் வழங்கப்பட்டு வருகின்றது.

இல்லறந் தேவநியமகம் :—சர்வஜீவ தயாபராகிய சிருஷ்டிக் கடவுள், தம்மை வணங்கவும் ஸ்தோத்திரிக்கவும், சகல ஜீவாத்துமாக்களுக்கும் பிரயோசனமாயிருக்கவுமே, ஆதியில் ஒரு மனிதனைச் சிருஷ்டித்தார். ஒருவன் தனியேயிருந்தால், இந்தப் பரிசுத்தமும் உத்தரவாதமுமான கடமைகளைச் செய்ய, இயலாதவனா யிருப்பானென்பதை அவரறிந்து, அந்த ஆதிமனிதனுக்கு ஒரு பெண்ணை இல்வாழ்க்கைத் துணைவியாக உண்டாக்கினார். இக்கருத்தையொத்தே "கலியாணமில்லாதவன் கையில்லாதவன்," "ஆடவளில்லாதவன் அரையாண்பிள்ளை," "மனைவியற்றவன் மேன்மையற்றவன்" என்னும் முதுமொழிகள் கடவுளுடைய நியமகத்தை யாவரும் நிறைவேற்ற வேண்டுமென்று, இந்நாள் வரையிலும் முறையிட்டுவருகின்றன.

மனையாளின் மேன்மை :—ஒரு மந்திரி தன்னரசனுக்கு எவ்வாறிருக்கின்றானோ, அவ்வாறே ஸ்திரீயுந் தன் நாயகனுக்கு இருக்கின்றாளென்பது நிச்சயம். சுத்தம், சுறுசுறுப்பு, உண்மை, கீழ்ப்படிதல், பொறுமை, தேவபக்தி முதலிய ஆறு லட்சணங்களையும், ஆபரணம்போல் அணிந்திருப்பவனே அமைச்சனும். அவ்வாறே, மனையாளென்னப்பட்டவளும் இவ்வாறு இலட்சணங்களையும் அணிந்திருக்க வேண்டியது அவசியமாம். இதனால் தான் "குடித்தனமோ துரைத்தனமோ" என்னும் மூதுரையும் வழங்கப்பட்டு வருகின்றது.

மனையாள் செய்யவேண்டிய கடமை :—அரசனுடைய வரவு செலவு எவ்வளவென்றும், மித்துரு சத்துரு எவரென்றும், குடிகளைப் பட்சத்தோடு தேவநீதியில் நடத்துவது எவ்வாறென்றும், தேசத்திற் சமாதானத்தை யுண்டாக்கும் வகை யின்னதென்று மறிந்து, அரசனுக்கு மேன்மை யுண்டாகும்படியாக, இராஜகாரியங்களை நடத்துவதே மந்திரியின் கடமையாம். அதுபோல, நாயகனுடைய வரவு செலவு இவ்வளவென்றும், மித்துரு சத்துரு இன்னாரென்று மறிந்து (பிரஜைகளைப்போற் காணப்படும்) பிள்ளைகள், பந்துக்கள், அயலார் சிநேகிதர் முதலியோரை யுண்மையிலும் நீதியிலும் நடத்த முயன்று நாயகனுக்கு அபகீர்த்தி வாராதிருக்கும் வண்ணம், குடும்பகாரியங்களை நடத்திவருவதே மனையாளின் கடமையாம்.

மேலும், இல்லறவாழ்க்கையிலிருக்கும் ஸ்திரீயும் புருஷனும், எவ்வாறு ஒருவருக்கொருவர் தேவ நியமகப்பிரகாரம் நடந்துகொள்ள வேண்டுமென்பது, முதியோர்களின் வாழ்த்துதலினால் தெளிவாய் விளங்கும். எவ்வாறெனில், மணவறையிலிருக்குந் தம்பதிகளாகிய மணமக்களை முதியோர் பார்த்து.—,,தீபத்தின் ஒளியும் அனலும் போலும்," "மலரின் மணமும் நிறமும் போலும்," "விரலின் நகமுஞ் சதையும் போலும்"—, நீங்களிருவரும் ஒருமித்து வாழ்விர்களாகவென்று அருள்வாக்குப் பொழிவது நமது தேசத்தில் இயல்பு. அவற்றின் பொருள் யாதெனில் :—

(1) தீபத்தின் ஒளியும் அனலும்போல், ஸ்திரீயும் புருஷனும் ஒருமனப்பட்டு வாழ்வதே நீதி :—அனலின்றி ஒளியிராதென்பது திண்ணம். ஏதாவதொரு வஸ்துவில் அனலின்றி ஒளியிருக்குமாயின் மனிதருக்குப் பிரயோஜனமாக இரவில் வெளிச்சத்தைக் கொடுக்கும் அனலோடுகூடிய தீபத்திலுண்டாகும் ஒளியாயிராது என்பது நிச்சயம். மனைவியானவள் தன் கணவனுடைய மேன்மையென்னும் ஒளியாயிருக்கின்றாள். ஆகையால், எவனும் இல்

லறவாழ்க்கையில் ஸ்திரீயின்றி மேன்மைபெற வியலாது: அனலிலிருந்து ஒளியையாவது, ஒளியிலிருந்து அனலையாவது பிரிக்க முடியாது: பிரிக்க முயன்றால், அவ்விரண்டு மில்லாமற்போகும்; கொழுநனையுங் காதலியையும் பிரிக்கமுடியாது. ஸ்திரீயாவது, புருஷனாவது, அல்லது இருவருமேயாவது (நல்லவர்களைப்போல் நடிக்கும்) தூர்த்தரின் துராலோசனைக்குச் செவிகொடுப்பார்களேயாகில், ஒருவரைவிட்டு ஒருவர் பிரிந்து, துஷ்டர்வசமாகி, கனவீனமடைந்து, தங்கள் காலமெல்லாம் அவமானத்தால் மூடப்பட்டு, தன்னந்தனியே நின்று, கலங்கித் தவிக்க நேரிடும். ஆகையால் இல்லறவாழ்க்கையி லிருக்கிறவர்கள் "நிதானம் பெரியதானம்" என்னும் முதுமொழிப்பிரகாரம், எக்காலத்திலும் எவ்விஷயத்திலும், நிதானமாய் யோசித்து நடப்பது அவசியமாம்.

(2) **மலரின் மணமும் நிறமும் போல் கணவனும் மனைவியும் அன்பு பாராட்டி வாழ்வதே நீதி.** இவ்வுலகின்கண் வசிக்கும் மானிடர் யாவரும் நல்ல நிறமும் வாசனையும் பொருந்திய புஷ்பத்தையே விரும்புவது இயல்பு. நிறமாகிய கொழுநனும் வாசனையாகிய மனைவியும் ஒருமனப்பட்டு வாழ்வதே மலர்போன்ற குடும்பமென்னப்படும். வர்ணத்திலிருந்து வாசனையையாவது, வாசனையிலிருந்து வர்ணத்தையாவது பிரிக்கமுடியாது; பிரிக்கமுயன்றால் கசக்கவேண்டியதாகும்; அவ்வாறு செய்தால், நல்ல நிறமும் வாசனையும் மாறி, புஷ்பமாகக் காணப்படமாட்டாது. அதுபோல, காதலனையுங் காதலியையும் ஒருவரிலிருந்து ஒருவரைப் பிரிக்கமுடியாது. கணவனாவது, மனைவியாவது அல்லது இருவருமேயாவது, ஒருவரையொருவர் தூஷிக்கவுந் துன்பப்படுத்தவு மெத்தனித்தால், புஷ்பத்தைக் கசக்கினவுடனே, எவ்வாறு நிறங்குன்றி, மணமாறி, எதற்கும் பிரயோசனப்படாமற் குப்பையிலெறியப்படுமோ, அவ்வாறே, இவர்களும் யாவராலும் இகழப்பட்டு, சன்மார்க்கர் நடுவிலிருந்து நீக்கப்படுவார்கள். ஆகையால், ஒருவர் செய்யுந் தப்பிதத்தை யொருவர் பொறுத்து, எவ்விஷயத்திலும் நிதானமாய் நடந்துகொள்வதே மேன்மையாம்.

(3) **நகமுஞ் சதையும்போல், இல்லாளும் நாயகனும் ஒத்து வாழ்வதே நீதி.** விரலில்லாத கைகளையுடையவன் ஜீவனோடிருக்கும் புழுவுக்குச் சமானமானவன். ஏனெனில், விரலில்லாவிடில் எவ்வகைவேலையும் செய்யமுடியாது. விரல் மனிதனுக்கு மகா அவசியமான உறுப்பாம். விரலானது நகமில்லாதிருந்தால், பூணில்லா உலக்கைபோலும், இலாடமில்லாக் குதிரைபோலும் பிரயோசனமற்றுப் போகுமென்று சர்வஞானரறிந்து விரலைப்பாதுகாக்கவும், அதற்கு உதவிபுரியவும், நகத்தை விரலின் நுனியில் அமைத்திருக்கின்றார். இவ்வளவு பிரயோசனமுள்ள நகத்தைத் தன்னளவிற்கு மிஞ்சிவளரவிட்டால், நம்மையுங் காயப்படுத்தி வருத்தத்திற்குள்ளாக்கி, தானுஞ் சடுதியாய்த் தன்னிடம்விட்டுப் பெயர்ந்து, விழுந்துபோகும். அது கடைசியாக, எவ்வகைவேலைக்கும் பயன்படாமல், குப்பையிலெறியப்படும். ஆகையால், அதை அளவிற்கு மிஞ்சி வளரவிடாமல், அடிக்கடி மெதுவாய்ச் சீவிவரவேண்டியது மகா அவசியமாம். "இல்லாளில்லா வீடு இடுகாடு," "தாய்க்கு இரண்டாவது தாரம்," "துணைவியில்லா வீடு துறந்த மண்டபம்," "பண்ணடிச்சியில்லாப் பண்ணை பாழாகும்," "மனைவியில்லா வீடு மண்மேடு" என்னும் முதுமொழிகளின் கருத்தின்படி மனைவியானவள், விரலுக்கு நகத்தைப்போல், இல்லறவாழ்க்கைக்கு இன்றியமையாதவளாயிருக்கின்றாள். இவ்வளவு பிரயோசனமான, "இல்லறமாணிக்கம்போன்ற," இந்த வாழ்வரசியைத் தன்னிஷ்டப்பிரகாரம் நடக்க இடங்கொடுத்தால், நாயகனையுமிழிவுக்குள்ளாக்கி, தானுந் துன்பத்திற் சிக்குண்டு, அவமானத்தால் மூடப்பட்டு, தன் காலமெல்லாம் ஆதரவற்று, அலைந்து திரிய ஏதுவாகும். ஆகையால், ஒருவன் தன் மனைவியை நேசிப்பது

உண்மையாயிருந்தால், "அடக்கம் ஆயிரம் பொன்" என்னும் மூதுரையின்கருத்தை அவளுக்கடிக்கடி விளக்கிக்காட்டி, அவளைத் தன்னதிகாரத்திற்குள்வைத்து, மரியாதையாய் நடத்திவருவதே உத்தமமாம்.

(4) மாதர்க்குகந்த நவமணி மாலை:—"ஆளனில்லாதவள் அரைப்பெண்பிள்ளை," "நாயகனில்லாதவள் நலமில்லாதவள்" "கணவனில்லாதவள் காற்பெண்பிள்ளை," "கொழுநனற்றவள் கொண்டையற்றவள்," "பெருமாளிருக்கும் வரையில் திருநாள்," "மணவாளனுள்ளளவும்மகிழ்ச்சி," "சுவரை வைத்துக்கொண்டல்லவோ சித்திரமெழுதவேண்டும்," "கல்லானாலுங் கணவன், புல்லானாலும் புருஷன்," "ஆனைகட்டிவாழும் அப்பன் வீட்டைப் பார்க்கிலும், பூனையிருந்துவாழும் புருஷன் வளவு மேல்"—இந்த நவமணிகள்போன்ற பழமொழிகள், நம்முடைய தமிழ்நாட்டில், பலவிடங்களிலுஞ் சாதாரணமாய் வழங்கப்பட்டு வருகின்றன. இவற்றின் கருத்தைநோக்குமிடத்து, ஸ்திரீகளுக்குத் தங்கள் கணவர்களாலேயே, சகலமேன்மையு முண்டாகின்றனவென்று, தெளிவாய் விளங்குகின்றது. மேலும், நம்முடைய அனுபவமும் இதற்குச் சாட்சியாயிருக்கின்றது. ஆகையால், இந்த நவமணிமாலையை யெந்த தர்மபத்தினி தன் இதயத்தில், அன்புடனணிந்து நடக்கின்றாளோ, அந்த அம்மணி யாவராலும் எக்காலத்திலும் புகழப்படுவாள். இஃதன்றி, "பாடுபட்டவள் பட்டம் பெறுவாள்" என்னும் பழமொழியொன்றுண்டு. அஃது மாதர்களுக்கோர் "கிரீடம்" போன்றது. எந்த ஸ்திரீ தன்னுபகனுக்கு உண்மையுள்ளவளாயிருந்து, அவன் குடித்தனத்தை ஊக்கத்தோடுநடத்தி சுற்றத்தார் அயலார் முதலியோருக்கு நன்முன்மாதிரியாய் நடந்து வருகின்றாளோ, அவள் "உத்தமி" என்னும் பட்டத்தை நிச்சயமாய்ப்பெறுவாள். சுபம்!"

---

## ஆநந்தவல்லி.

---

### ஓர் உண்மையான கதை.

II

"நெருப்புத்தெரிந்து சுட்டாலும் தெரியாமற் சுட்டாலும் சுட்டது சுட்டதே"

ஆற்காட்டு ஜில்லா போளூருக்கு நாலுமைல் தூரத்திற்கப்பால் நக்ஷத்திரக்குன்றம் என்று பெயருள்ள ஒரு சிறியகுன்று இருக்கிறது. அக்குன்றத்தின் உச்சியில் சுப்பிரமணியஸ்வாமி தேவாலயம் ஒன்றிருக்கிறது. அதன் அடிவாரத்தில் உள்ள ஒரு பழைய சத்திரத்தில் அம்மணியம்மாள் என்னும் பெயருள்ள பரதேசியொருவர் இருந்தார். இந்த அம்மாள் பரதேசியாவதற்குமுன் சந்திரகிரி ராஜாவின் மனைவிகளில் ஒருவராயிருந்தார். 18-வயதுள்ள இளம்பெண்ணாயிருக்கையில் ஏதோ ஒரு காரணத்தால் பிரபஞ்சவாழ்க்கையில் வெறுப்புத்தோன்ற அப்பொழுது மூன்று மாசத்துப் பாலனாயிருந்த தனது குழந்தையைத் தொட்டிலில் கண்வளர்த்திவிட்டு தான் திடீரென்று ஸ்வாமியைக்குறித்துத் தபசுசெய்ய வெண்ணி காட்டிற்குட் போய்விட்டாள். இராஜாத்தி தனியாகக் காட்டில் போவதைக்கண்டு மாட்டுக்காரப் பையல்கள் அந்தம்மாளைப் பின்தொடர்ந்து சென்றார்கள். இவர்கள் தன் நகைகளுக்காகத் தன்னைத் துரத்திவருகிறார்களென்று எண்ணி அந்த அம்மணி தான் பூண்டிருந்த நகைநட்டுகளையெல்லாம் கழட்டி ஒரு துணியைவிரித்து அதில் வைத்து அவர்களையெடுத்துக்கொண்டு போகும்படி சைகை காட்டிவிட்டு, தான் நடுக்காட்டில் பிரவேசித்து ஏகமாய் வழிநடந்து சென்றாள். இப்படிப் போனவள் அங்குபோய் என்னதபசுசெய்தாளோ எது செய்தாளோ தெரியவகையில்லை. சுமார் பத்துப்பன்னிரண்டு வருஷங்கள் கழித்து இவளை அக்காட்டில் மறுபடியும் கண்டபொழுது இவள் காய்கனிகளைப்புசித்து சுனைநீரைக் குடித்துக்கொண்டு பார்வைக்குக் கேவலம்

காட்டுமனுஷிபோலிருக்கக் காணப்பட்டாள். அஃதோடு இவளுடைய முகத்தில் அபூர்வமானதேஜஸு விளங்கவும் சொல்லக்கூடாத அற்புதசக்திகள் இவளிடத்தில் விளங்கவும் கண்டார்கள். இச்சின்னங்களால் இவள் மஹாத்மாவென்று ஊகித்துணர்ந்த சிலர் இவளை ஒரு சத்திரத்தில் கொணர்ந்துவைத்து அன்ன ஆகாரம்கொடுத்து அதை யுண்ணும்படி பழக்கினார்கள். இடையில் இவள் காட்டில் கழித்த காலத்தில் ஆகாரம்புசிக்கும் விதத்தையும் மறந்துவிட்டதாகத் தோற்றுகிறது. அது எப்படியிருக்கினும் இவள் மறுபடியும் கொஞ்சகாலத்தில் நாகரிகமனிதர்களோடு சாதாரணமாகப்பழகும்படியான ஸ்திதிக்கு வந்தாள். அப்பொழுது அவளுடன் கூடவிருந்தவர்களில் ஹனுமந்தப் பரதேசி யென்னும் ஒரு ஆண்பிள்ளையும், 'யெல்லு' என்னும் ஒரு வேலைக்காரஸ்திரீயும் அந்த அம்மாளை விட்டு இணைபிரியாதிருந்தார்கள். இவர்களில் ஹனுமந்தப் பரதேசியின் விர்த்தாந்தம் வேடிக்கையானது. அந்தப் பரதேசி பூர்வாச்சிரமத்தில் ஏதோ கற்றுத்தேர்ந்து நாலூ எண்பதோ சம்பளம் கிடைக்கும் உத்தியோகத்திலிருந்தவராகச் சொல்லிக்கொண்டார்கள். அவர்க்கு உலகவிஷயத்தில் விரக்திவர பக்திமார்க்கத்தை யனுசரித்துக்கொண்டு சற்குருவை யெதிர்பார்த்து இல்லறத்திலிருந்து வந்தவராகத்தெரிகிறது. ஒருநாள் காட்டிற்கு இலைபறிக்கப்போய் ஒரு மரத்தின்மேலேறி இலைபறித்துக்கொண்டிருந்தார். அப்பொழுது அம்மணியம்மாள் காட்டில் தனிமையாக நினைத்தவிடத்தில் வசித்துக்கொண்டிருந்தார். அன்றையதினம் இந்த அம்மணி அம்மரத்தினருகிலுள்ள ஒரு சுனையில் நீரருந்தி அம்மரத்தடியில் வருகையில் மேலிருந்து இலைகள் உதிர, நிமிர்ந்துபார்த்தார். நிமிர்ந்து பார்த்தவர் இவரைக்கண்டு "ஹனுமந்தபேட்டோ," என்று செப்பினர். அதாவது குரங்கோ, என்றார். உடனே மரத்தின்மேலிருந்தவர் சரச்ரவென்று கீழிறங்கிவந்து அவர் காலில் விழுந்து பணிந்து அவரையே சரணமாக அடைந்தார். அதுமுதல் அவர் பரதேசியாகி அந்த அம்மணியைவிட்டு இணைபிரியாமல் அவருக்குத் தொண்டுபுரிந்துகொண்டும் அவரைப் பூஜைசெய்துகொண்டும் அவருண்ணும் ஆகாரத்தில் தனக்குக்கிடைத்ததெதுவோ அதையுண்டு பசியாறி ஞானமார்க்கத்திலிருந்து வந்ததாகத் தெரியவருகிறது. நாம் குறித்தகாலத்தில் இவர் இப்படி பலவருஷகாலம் அவரோடிருந்திருக்கவேண்டு மென்று தெரிகிறது. அந்த சத்திரத்திலிருந்த அவ்வம்மணி தனது தேகஸம்ரக்ஷணையைப்பற்றிச் சிறிதும் கவலையன்றி சதா பிரம்மானந்தானுபவத்தில் மூழ்கியிருந்தார். அவரைப்பார்க்க வருகிறவர்கள் ஏதோகொணர்ந்துகொடுப்பதையே ஹனுமந்த பரதேசிக்குக்கொடுத்துத் தானும் புசித்துவந்தார். மற்றொருவேலைக்காரி அந்தம்மணியின் நிலையையறிந்து அவருக்குத் தொண்டுசெய்துவருவதே தனக்கு விரதமாகக்கொண்ட சூத்திரஜாதி ஸ்திரீ. இந்த அம்மணி யிங்கிருக்கையில் இவருடைய கீர்த்தியைக்கேட்டு அனேகர் இவரைத்தரிசனம் செய்துபோகவந்தார்கள். சிலர் உபதேசம் பெற்று இவருடையூ வரப்பிரசாதம் கிடைக்கவேண்டுமென்கிற அவாக்கொண்டு இவரையண்டிச் சிலகாலமிருந்து போவதுமுண்டு. இப்படி யிவரைச் சரணடைந்த தம்பதிகள் இருவருக்கு இவர் உபதேசம்செய்து யோகாப்பியாசமுறை போதிக்க அவர்கள் அம்முறையை அப்பியசித்து வருகையில் மூச்சடைத்துக்கொண்டு பிராணனை யிழந்துவிட்டார்களென்று சிலர் சொல்லிக்கொண்டார்கள். இதனுண்மை யெப்படியோ நாமறியோம். ஆனால் ஒன்றுமட்டும் உண்மையாகத்தெரியும். இவரிடத்தில் யாரும் சேஷ்டைசெய்து இவருக்கிடர் விளைத்ததில்லை. இதனால் அங்குள்ள ஜனங்களெல்லாம் அவ்வளவு யோக்கியர்களென்று நினைக்கக்கூடாது. அக்குன்றத்திற் கருகிலுள்ள துருக்கத்தறுதலைகள் அனேகர் இந்த அம்மாளைத் தொந்திரவுசெய்யவேண்டுமென்று சங்கற்பம் செய்துகொண்டு அதற்காகப் பன்

முறை யுத்தசன்னத்தராய் அவரிருக்குமிடத்திற்குச்சென்றதுண்டு என்பதை ஆதாரமூலமாயறிவோம். ஆனால் அவர்கள் அந்த அம்மாளுக்கு எதிரில் போகவும் அவருடைய சதியோசனைகளையெல்லாம் மறந்து மற்றவர்களைப் போல் தூரநின்று அமரிக்கையாய் வேடிக்கை பார்த்துவந்தார்களேயன்றி மற்றப்படி யெந்த சேஷ்டையும் செய்யக்கண்டதில்லை. அவர் சந்நதியிற் போகவும் அவர்கள் துர்ப்புத்தி அவர்களையறியாமல் மாறிவிட்டது. சித்தி பெற்ற ஞானிகளுக்கு துஷ்டர்களை யிப்படி யடக்கும் சூக்ஷ்மசக்தியுண்டென்பது பிரசித்தமான விஷயம். அந்தம்மாளிடத்தில் இந்த சக்தியிருந்ததின் காரணமாக யாரும் அவருக்குத் தீங்கிழைக்கக்கூடவில்லை யென்பது அடிக்கடி அவரைப்பார்க்கச் சென்று பழகினவர்களுடைய திடமான அபிப்பிராயம்.

இந்த அம்மாளைப்பார்க்கும் பொருட்டு நமது பாட்டி வாலம்மாள் அவருடைய பெண் சுப்பம்மாளையும் செல்வப்பேரத்தியாகிய ஆனந்தவல்லியையும் அழைத்துக்கொண்டு இன்னும் சிலரைத் துணையாகக்கொண்டு தேவிபுரத்திலிருந்து போளூருக்கு வந்து அங்கிருந்து மறுநாட் கிருத்திகையுற்சவத்தை முன்னிட்டு நக்ஷத்திரக்குன்றத்திற்குப் பிரயாணமாகப் புறப்பட்டாள். ஜனங்கள் ஆயிரக்கணக்காக அவ்வூருக்கு கிருத்திகைக்காகப் போவதுண்டு. சுப்பிரமணியஸ்வாமி ஸ்தலமாதலால் கிருத்திகை நக்ஷத்திரம் மிகவிசேஷமான உற்சவம். ஆண்டிகள் பண்டாரங்கள் பிச்சைக்காரர்கள் இவர்கள் கூட்டம் மிக அதிகமாயிருக்கும். கோயிலில் ஜனக்கூட்டம் நெறிநெறியென்று நெறிகிறது. பிரார்த்தனை செய்துகொண்டவர்கள் பிரார்த்தனையை நிறைவேற்ற காவடிகள் எடுத்துக்கொண்டு போய் சுப்பிரமணியஸ்வாமிக்கு அபிஷேகம்செய்து வந்தார்கள். மற்றப்படி பிரார்த்தனை செய்துக்கொண்டவர்கள் கூட்டமும் விசேஷமே. அந்தக்கூட்டத்தில் போய் ஸ்வாமிதரிசனம் செய்யமாளாமல் நமது வாலம்மாளும் அவள் பரிஜனங்களும் அடிவாரத்திலுள்ள சத்திரத்தில் தங்கி அங்கிருந்த அம்மாளுக்கு பழவகை பலகாரங்கள் கொடுத்துபசரித்து அவர் பகவத்விஷயமாய்ச் சொல்லிய வார்த்தைகளை அதிக பக்தி சிரத்தையோடு கேட்டுக்கொண்டிருந்தார்கள். விரகறியாச்சிறுமியான ஆனந்தவல்லி சுத்தசத்துவகுணத்தோடு அந்தம்மாள் முகத்தையே பார்த்துக்கொண்டு ஆனந்தமாயுட்கார்ந்திருந்தாள். அங்குள்ள அத்தனைபேர்களிலும் இந்தக்குழந்தையினிடத்திலே யந்த அம்மாளுக்கு அவளையறியாது அன்பு பூரித்துக்கிளம்பியது. இப்படி யுள்ளன்பூறவும் அந்த அம்மணி வந்தவர்களோடுபேசுவதில் உற்சாகமிழந்து அக்குழந்தையையே பார்த்து ஆனந்தித்துக் கொண்டிருந்தனர். இப்படி அக்குழந்தை மனது தன்னையறியாது அந்த அம்மாளிடத்தில் பற்றியிருக்க அவருடைய மனதும் குழந்தையினிடத்தில் அவரறியாமலே பற்றுக் கொண்டது. சிறிதுநேரம் இப்படியிருக்க இருவர் மனமும் கலந்துவிட்டது. அம்மணியம்மாள் தனக்கு வாலம்மாள் கொடுத்த 'பொருவிளங்காய்' ஒன்றை யெடுத்துக் கையில் எடுத்து கண்களில் அன்பு நிறைந்தொழுக அருள் சுரந்து அதை அக்குழந்தைக் கீன்றாள். அக்குழந்தையும் அதிகப்பிரீதியோடு அதை வாங்கிக்கொள்ளச்சென்றது. அப்பொழுது அந்த அம்மணி அக்குழந்தையைத் தன் பக்கத்திலிருத்தி அன்போடும் அருளோடும் அவளைத்தடவிக்கொடுத்து ஹிருதய பூர்வகமாய் அவளை மானசீகியாக ஆசீர்வதித்தார். அக்குழந்தையும் அப்பரதேசியும் தாயும் மகளும் போலிருந்தார்கள். அக்குழந்தையை அந்த அம்மாள் இப்படி பாராட்டிச் சீராட்ட எல்லாரும் அவர்கள் விளையாட்டையே பெரிதாக வெண்ணி வாய்பேசாமல் ஆநந்தமாய்ப்பார்த்திருந்தார்கள். நமது ஆநந்தவல்லியோ தாய் மடியிலுள்ள குழந்தைபோல ஆனந்தபரவசமாய் மற்றவர்களையெல்லாம் மறந்து அப்பாதேசியின் பூர்ண அன்பில் மூழ்கி தேன்குடித்த வண்டுபோல் தியங்கியிருந்தாள்.

ஸத்தியசந்தன்.

## ஆண்வேண்டுமா பெண்வேண்டுமா?

விவாகமான இளம் பெண்களும், பேரிளம் பெண்களுங்கூட இக்கேள்விப்படி வரனளிக்க வைத்தியர்களால் சாத்தியமென்றால் மிகச்சந்தோஷப்படுவார்கள். இத்தேசத்தில் பிள்ளையில்லாதவர் கண்ட கண்ட கோவில்களிலெல்லாம் கையெடுத்துக்கும்பிடுவதுடன் ஆஷாடபூதிகளான சாது வேஷதாரிகளையும், மந்திரவாதிகளையும் நம்பி மதிமோசம் போகிறார்கள். சில வருஷங்களுக்கு முன் ஒளஸ்திரேலியாவில் டாக்டர் ஷேன்க் என்னும் பேருள்ள டாக்டர் ஒருவர் கருத்தரித்த ஸ்திரீயின் இஷ்டம்போல் கருவிலுள்ள சிசுவை ஆணாகவோ பெண்ணாகவோசெய்வது சாத்தியமென்று தான் கண்டுபிடித்திருப்பதாக வெளியிட்டார். இவர் வெளியிட்டதை உடன் வைத்தியர்கள் ஒப்பாமல் இவரைப்பலவாறு சொல்லிக் கேலிசெய்தாலும் ஐரோப்பாவிலுள்ள இராஜகுடும்பங்களைச்சேர்ந்த சீமாட்டிகள் பலர் இவருதவியை நாடி அவரவர் மனோபீஷ்டத்தை நிறைவேற்றிக்கொள்ள முயன்றார்களென்பது பிரசித்தம். இப்பொழுது அமெரிக்கா ஐக்கிய மாகாணங்களிலுள்ள சிகாகோ நகரில் ஒரு டாக்டர் கருவிலுள்ள பிண்டத்தை ஆண் சிசுவாகவோ பெண் சிசுவாக தாயின் இஷ்டம்போல் வைத்திய சிகிச்சையினால் மாற்றலாமென்று பரிசீலனை செய்து கண்டு பிடித்திருக்கிறதாக வெளியிட்டிருக்கிறார். இதற்குமுன் வெளிவந்த டாக்டருக்கும் இவருக்கும் ஒரு விஷயத்தில் ஒற்றுமையிருக்கிறது. அது தான் மிகவும் முக்கியமான விஷயம். அவர் சொன்னதுபோலவே இவரும் சூல்கொண்ட தாயின் உறுப்புகளில் 'நைட்ரஜன்' ஜாஸ்தியாகவிருந்தால் ஆண் குழந்தை பிறப்பது நிச்சயம்: அது குறைவாயிருந்தால் பெண்குழந்தை பிறக்குமென்கிறார். கருப்பிணியானவள் கருத்தரித்தவுடனே அவர் சிகிச்சைக்குட்பட்டிருந்தால் அவளுடைய தேகத்தில் 'நைட்ரஜன்' இருக்குமளவைப் பரிசீலனைசெய்துணர்ந்துகொண்டு ஆணோ பெண்ணோ விரும்பிய விருப்பத்திற்கேற்க உணவுகளாலும் 'நைட்ரஜன்' மிகுதியாயுள்ள ஒரு ஒளஷதத்தாலும் கருப்பிணியின் தேகக்கூறுபாட்டை முதலிரண்டு மாதங்களுக்குள் மாற்றி அது மூலமாக கருவில் பிண்டமாயிருந்து வளரும் சிசுவையும் ஆணாகவோ பெண்ணாகவோ உருத்தரிக்கும்படி செய்யலாமென்கிறார். இந்தச் சிகிச்சை முதலிரண்டுமாசத்துக்குள் பலித்தால் தான் பலித்தது; மூன்றும் மாசத்தில் சிசுவுக்குக் கருப்பையில் ஆணுருவோ பெண்ணுருவோ அமைந்துவிடுகிறபடியால் அக்காலத்திற்குப்பிறகு செய்யும் முயற்சி பயன்படாது. இதற்குத் தத்துவவிளக்கம் எப்படியென்றால் இந்த அமெரிக்கன் டாக்டர் சொல்கிறபடி அது பின்வருமாறு:— மனுஷ உரு முதலில் ஒரு 'ஸெல்' அதாவது அணுப்பிரமாணமான ஒத்தைக் கோளத்திலிருந்து அனேகம் 'ஸெல்கள்' சேர்ந்து சிறுகச்சிறுக வளர்ந்துண்டாகிறது. முதலிரண்டு மாசகாலத்தில் கருவிலுள்ள பிண்டம் பூச்சி புழு இவைகளைப்போல் எலும்பற்ற பிண்டமாகவே யிருக்கிறது. இப்படி பிண்டமாயிருக்கிறகாலத்தில் 'நைட்ரஜன்' கருப்பிணியின் உறுப்பில் அதிகமாயிருந்தால் அது பிண்டத்தில் விசேஷமாகச்சேர்ந்து அந்த விசேஷபலத்தால் அதிக வலு பிண்டத்துக்குண்டாகி அதற்கேற்றதான ஆண் சொரூபத்தை யடைகிறது. குறைந்திருந்தால் பெண் சொரூபத்தை யடைகிறதென்று சொல்கிறார். டார்வின் இந்த உண்மையை முதல் முதல் கண்டுபிடித்தார். அந்த உண்மையைக்கொண்டு மேல்விசாரணை செய்து அதிநுட்பமான மதியூகத்தால் இந்நூதன மர்மத்தை இவர் கண்டுபிடித்ததாகச் சொல்கிறார். இவர் இதை விஸ்தாரமாகக் காரியத்தில் பரிசீலனைசெய்து பார்த்ததில் இவர் கண்டுபிடித்த மர்மம் காரியத்திலு மப்படியே யிருப்பதாக விளங்கிற்றென்று சொல்கிறார். இதன் உண்மை யெப்படியோ, பலர் இதை யனுசரித்துப் பலனை யனுபவரீதியாக உணர்ந்தாலன்றி நிச்சயமாய்ச் சொல்வதற்

கில்லே. ஆனுல் இவர் ஆதாரமாகச் சொல்லும் உள் தத்துவம் ஏதோ உண்மையானதும் வாஸ்தவத்தில் இவருடைய வார்த்தையில் உண்மை யிருக்கலாமென்று ஊகிக்கத்தக்கதாகவுமிருக்கிறது. மனுஷன் இப்படி அணுப் பிரமாணமான உருவத்திலிருந் துண்டானு னென்பது மேற்குத்தேசங்களில் டார்வின் இவ்வுண்மையை யுணர்ந்து வெளிப்படுத்தினது முதலே பிரசித்திபெற்றுப் பிரபலமாய் வழங்கி வருகிறதானுலும் இந்தியாவில் இக்கோட்பாடு வேதமுண்டான காலமுதல் தத்துவஞானிகள் வெகு சாத்தாரணமாக வெடுத்துக்கூறிப் போதித்துவரும் உண்மைகளில் ஒன்ருயிருந்து வழங்கிவருகிறதென்பது பிரசித்தம். இதன் உண்மையை தத்துவசாஸ்திர நூல்கள் எல்லாவற்றிலும் சாதாரணமாகக் காணலாம்.

---

## காலஞ்சென்ற ப்ரெடரிக் சக்ரவர்த்தினி.

---

யாஜி இந்தியா சக்ரவர்த்தினி விக்டோரியா மஹாராணி யவர்களின் ஜேஷ்டபுத்திரியும் தற்காலம் இந்தியா சக்ரவர்த்தியாக விருக்கும் மாக்ஷிமைதங்கிய எட்வர்ட் அரசின் தமைக்கையும், ஜர்மானிதேசத்து சக்ரவர்த்தியின் தாயாருமாகிய ப்ரெடரிக் சக்ரவர்த்தினி ஆகஸ்டுமீ 4வ காலஞ்சென்ருர். இவர் வெகு காலமாக ரணரோகத்தால் வருந்திக் கொண்டிருந்தார். சென்ற ஜனவரிமீ விக்டோரியா மஹாராணியவர்கள் இறந்தபொழுது அவருடைய குழைந்தைகளில் இவர்மட்டும் இந்த உபாதியால் அவர் கிட்ட விருக்கமுடியாமலிருந்தது. இவருடைய கணவராகிய ப்ரெடரிக் சக்கரவர்த்தி பட்டதுக்குவந்த மூன்று மாசத்திற்கெல்லாம் தொண்டையில் கண்ட ரணம் அதிகப்பட்டு அதனுல்மிகவருந்தி மாண்டார். இவருடைய கன்னிப்பெயர் விக்டோரியா அடிலெய்ட் மேரி லூயிஸா ராஜகுமாரத்தி. இவர் பக்கிங்ஹாம் அரண்மனையில் 61-வருஷங்களுக்குமுன் பிறந்தார். இவர் விக்டோரியா மஹாராணிக்கும் அவருடைய கணவர் ப்ரின்ஸ் ஆல்பர்ட் அவர்களுக்கும் பிறந்த முதற்குழந்தை யாதலால், இவர் பெண்ணுகப் பிறந்ததைக் கேள்விப்பட்டதும் இவருடைய தகப்பனுர் ஒரு நிமிஷத்துக்கு பிள்ளையாகப் பிறக்கவில்லேயே யென்று விசனித்தார். பிறகு பெண்ணுனுலென்ன, பிள்ளையானுலென்ன ஈசுவரன் நமக்கு அளித்ததே உத்தமமென்று சந்தோஷப்பட்டார். இப்பொழுது அரசாளும் எட்வர்ட் அரசர் மறுவருஷம் பிறக்கும்வரையில் இவரே பட்டத்துக்குரிய இராஜகுமாரியாகவிருந்தார். இவருடைய தகப்பனுர் ப்ரின்ஸ் ஆல்பர்ட் அவர்கள் குழந்தைகளை வளர்ப்பதில் வெகு பொறுப்புப்பாராட்டும் புண்ணிய சீலராகையில் இவரை வளர்ப்பதில் தாம் நேரில் வெகு சிரத்தையெடுத்துக்கொண்டுழைத்துவந்தார். ஸ்வாமி நமக்குப் புத்திர பாக்கியத்தை யளிப்பது நாம் அவர்களை நல்வழியில் நடத்தி அவரைத் துதித்து வழிபடும்படி செய்வதற்காகவென்று பூரணமாய் நம்பினவராதலால், தம் கடமையைக் குறைவற நடத்திவருவதில் மிக ஊக்கமுடையவராயிருந்தார். பட்டத்துக்கு அரசியாகப்பிறந்த இராஜாத்தியானுலும் பால்ய வயதில் இவர் உழைத்த உழைப்பு வேறு யாரும் உழைத்திரார். இராஜாத்தியாகப் பிறந்தால் அந்த அந்தஸ்துக்கு வேண்டிய நலங்களெல்லாமிருக்கவேண்டுமென்று இவரை வெகு கடினமாக எல்லாவிதத்திலும் தேர்ச்சியடையும்படி இவர் தகப்பனுர் பழக்கிவந்தார். 9-10-வயசில் இவர் தமது தகப்பனுருக்கு உற்றதுணையாகும்படியான ஸ்திதியிலிருந்ததன்றி அவரோடு மிக முக்கியமான இராஜதந்திர வேலைகளிலும் கலந்து பேசும்படியான திறமை வாய்க்கப்பெற்றிருந்தாரென்ருல் இவருடைய படிப்பும் பழக்கமும் எவ்வளவு விசேஷமாக விருக்கவேண்டுமென்று இதை வாசிப்போர் ஊகித்தறிந்துகொள்ளலாம். இவர் 14-வய

சாகவிருக்கையில் அப்பொழுது ஜர்மனி சக்ரவர்த்தியாயிருந்த முதலாவது உவில்லியம் அவர்களின் ஜேஷ்ட குமாரரும் பட்டத்திற்குரியவருமாகிய ப்ரின்ஸ் ப்ரெடரிக் இவரை நேசித்து வாழ்க்கைத்துணையாகக்கொள்ள இச்சித்தார். இவர் மிகப்பாலியமாவிருப்பது கொண்டு இரண்டு வருஷகாலத்துக்கு இந்த மர்மத்தை அவருக்குத் தெரியாதபடி அவருடைய தாய் தகப்பனர் ஒளித்துவைத்தார்கள். பிறகு இவருடைய 16-வது. வயசில் இவரும் ப்ரெடரிக் இளவரசை மணம்புரிய இச்சித்தவராகக்காட்ட அப்படியே அவர்களுக்கு மணமுடிப்பதாக நிச்சயித்து அவருடைய பால்யதசையை உத்தேசித்து பின்னுமிரண்டு வருஷங்கழித்து இருவருக்கும் விவாகம் செய்யப்பட்டது. இவ்வாருக இவருடைய 18-வது வயதில் இங்கிலாந்தில் தமது பெற்ரோராகிய மஹாராணிக்கும், ப்ரின்ஸ் ஆல்பர்ட் அவர்களுக்கும் பக்கபலமாகவும் உற்றதுணையாகவுமிருந்து மிகச் செல்வமாய் வளர்ந்த இவர் அந்நியதேசத்தில் வாழ்க்கைப்பட்டு அத்தேசத்து இளவரசரோடு இல்லறம் நடத்தச்சென்ருள். யாருக்கும் இவ்வளவு பால்யதசையில் அந்நியதேசத்தில் இப்படித் தனியேபோயிருந்து இல்வாழ்க்கை தொடங்குவது கஷ்டமாயிருக்கும். இவருடைய தகப்பனர் விவாகமாகு முந்தியே ஜர்மனிதேசத்தின் வியவகாரங்கள், அத்தேசத்தாருடைய பழக்கவழக்கங்கள், சரித்திரவிவரங்கள் முதலியவற்றை இவருக்கு நன்ருக விளங்கப் போதித்து இவருடைய மனதை அடக்கியாளவும் புத்திதிக்ஷண்யத்தால் எந்த வேலையையும் கடமையே பெரிதென்றுபாவித்துப் பிழையறச்செய்யவும் கற்பித்து நன்ருக தர்பிதுசெய்திருந்தமையால் இவருக்கு அபாரமாய் நேர்ந்த இக்கட்டுகளிலெல்லாம் இவர் சாமர்த்தியமாக நடந்துகொண்டு புகுந்தவிடத்திலும் நல்லபேரும் கீர்த்தியும் வாங்கினர். இவர் வெகுகாலம் இளவரசியாயிருந்து தம் காதற் கணவரோடும் இனிதுவாழ்ந்து இல்லறம் நடத்தி நன்மக்களைப்பெற்றுப் பெருவாழ்வாவு வாழ்ந்தபின் இவருடைய மாமனர் இறக்க, இவருடைய கணவர் சக்ரவர்த்தியாகப் பட்டத்துக்குவந்தார். அப்பொழுது இவரும் சக்ரவர்த்தினியாகப் பட்டம் சூட்டப்பெற்ருர். இவருடைய கணவருக்கு வெகுகாலம் தொண்டையில் ரணமுண்டாகி அது சொஸ்தமாகாமல் மிகவருந்தினர். அப்பொழுதெல்லாம் இவர் தாமே கிட்டவிருந்து தம் கணவரைத் தாய்போலாதரித்துக் காப்பாற்றினர். பட்டத்துக்கு வந்தபிறகும் இந்த ரண வுபாதியே விசேஷமாகப்பாதிக்க அப்பொழுதும் அந்த சங்கடங்களையெல்லாம் மிகப்பொறுமையோடு பொறுத்துக்கொண்டு தன் கணவர் ஸ்திதியைக் ண்டு தன்னுயிர் துடிக்கவும் தான் ப.ஞ்நிடத்தை யிழக்காது அவருக்கு வேண்டிய சாதகங்களைச் செய்துகொண்டு கண்ணை யிமைகாப்பதுபோல் அலுப்புச் சலிப்பின்றி அவரைக்காத்துவந்தார் அவர் இறந்தபிறகு இவர் அந்நியரென்று அங்குள்ளார் இவரைப் புறக்கணித்து நடத்த யத்தனித்ததையும் வெகு பொறுமையோடும் சகித்துக்கொண்டு சமயோசித சாமர்த்தியத்தால் தமது பேருக்கும் கீர்த்திக்கும் குறைவுவராதபடி பாதுகாத்துவந்தார். இவருக்கும் அந்திகாலத்தில் ரண நோய்கண்டு வெகுகாலம் அதனல் வருந்தி படுக்கைவிட்டெழச் சக்தியின்றி கஷ்டப்பட்டபின் ஆகஸ்டுமீ 4உ ஞாயிற்றுக்கிழமை யன்றிராத்திரி இவ்வுலகவாழ்க்கையை விட்டு இங்கு அவர் பட்ட கஷ்டங்களெல்லாம் நீங்க கடவுளது பாதாரவிந்தத்தில் இளைப்பாறச் சென்ருர். இந்தியா சக்ரவர்த்தியாகிய மாக்ஷிமைதங்கிய எட்வர்ட் அரசருக்கு இவரிடத்தில் அத்யந்தப்பிரியம் உண்டு. பெறலருந் தாயை யிழந்து வருந்திய அவருக்கு அன்புமிகுந்த தமக்கையை யிழந்ததுக்கம் பொறுத்த லரிதாகும். ஆயினும் இவர் தெய்வபக்தி வழியில் வளர்க்கப்பட்டு தாமும் உண்மையான தெய்வபக்தியுள்ளவராகையால் ஈசுவரானுக்ரகம் எப்படியிருந்தாலும் அதை யேற்றுக்கொள்ள

வேண்டியதென்னும் விவேகத்தால் துக்க சாந்தி யடைவாரென்பதிற் சந்தேகமில்லை. இந்தியாவிலெல்லாரும் இவருக்குநேர்ந்த துக்கத்திற்காக அநுதாபப்படுகிறார்கள்.

---

## ஓர் உண்மையான சதி.

பதியெனப் புருஷனுக்குப்பேர். சதியென்பது அப்புருஷனோடு ஐக்கியப்பட்ட ஸ்ரீக்குப்பேர். புருஷன், பரமாத்மா; ஸ்ரீ, ஜீவன். நமக்குள் விவாகத்தின் உட்கருத்து ஸ்திரீபுமான்கள் உலக இன்பங்களை யனுபவித்து அவைகளின் நிலையற்ற தன்மையை யுள்ளபடியுணர்ந்து ஆத்மசுகமே சுகமென்று தெரிந்து இருவரும் ஒன்றுபட்டு உடலிரண்டும் உயிரொன்றுமாக ஐக்கியப்பட்டு அந்த ஆத்மாநந்த அனுபவத்தைக்கொண்டு பரமாத்மாவோடு ஐக்கியப்பட்டு மோக்ஷசாம்பிராஜ்யத்தை யடைய வேண்டுமென்பதாம். இதற்கு ஆத்மவிவாகம் என்று சொல்வதுமுண்டு. இரண்டு சிற்றாறுகள் ஒன்றாகக்கலந்தால் வெள்ளப்பெருக்கு அதிகமாகி ஒன்றுபட்ட நதிப்பிரவாகம் அதிவேகமாயோடி சமுத்திரத்தில் விழும். இந்த உட்கருத்தைக்கொண்டே புண்ணிய தீர்த்தங்கள் ஒன்றுகூடும் இடத்தில் சங்கமுக ஸ்நானம் செய்வது விசேஷமென்று சொல்லப்படுகிறது. யமுனையும் கங்கையும் ஒன்றுசேருமிடமாகிய பிரயாகை விசேஷமாகக் கொண்டாடப்படுவது இதனால்தான். இப்படி இரண்டுகூடிய நதிப்பிரவாகங்கள் எப்படி அதிவேகமாய் ஓடி சமுத்திரத்தோடு கலக்கின்றனவோ, அப்படித் தனிமையாகவிருந்து ஈசுவரத் தியானம் செய்து சாயுஜ்யபதவியடைய சக்தியில்லாதவர்கள் விவாகம்செய்துகொண்டு, உலகவின்பங்களை யனுபவித்து அவற்றின் நிலையாமையை யுணர்ந்து, அவற்றிலும் மேலான பேரின்பம் ஒன்றிருக்கிறதென் றுணர்ந்து அதைத்தேடுவான் இருவரும் ஒன்றுப்பட்டுக்கலந்து ஒருவருக்கொருவர் ஒத்தாசையாகவிருந்து துரித முயற்சிசெய்து இப்பிறவிக்கடலைத் தாண்டி உய்யவேண்டுமென்பது இல்லறத்தின் முடிவும் சாஸ்திரத்தின் நோக்கமுமாம். இக்கருத்தை விஸ்தரித்துக்காட்டிச் சென்ற வருஷம் ஜூலை, மாசத்துச் சஞ்சிகையில் எழுதியிருக்கிறோம். இந்த ஒற்றுமைகொண்டே சககமனம் என்னும் வழக்கம் ஏற்பட்டது என்றும் அது காலஞ்செல்ல ஜனங்கள் அதன் சூக்ஷ்ம அர்த்தத்தை மறந்து ஸ்தூல அர்த்தத்தை யனுசரித்து நடந்து வரத்தலைப்பட்டதால் "உடன்கட்டையேறல்" என்னும் கொடிய வழக்கம் ஏற்பட்டதென்றும், உண்மையான சதி நிர்ப்பந்தத்தால் பிராணனைவிடாளென்றும், அவள் பிராணன் புருஷனது பிராணனோடு ஐக்கியப்பட்டுப்போன பலத்தால், அது தானாகப் பிரிந்துபோகிறதென்றும் சொன்னோம்.* அப்படிப்பட்ட உண்மையான சதி தர்மத்தை தோல்பூர் மஹாராணியிடத்தில் காணும்படியாக நேர்ந்தது. சமீபகாலத்தில் தோல்பூர் மஹாராஜா இறந்துபோனார். அவர் இறந்தபின் நடந்ததை "ஸிம்லா நியூஸ்" என்னும் சமாசாரப்பத்திரிகையில் பிரசுரித்துள்ளபடி இங்கெடுத்தெழுதுகிறோம்:—"மஹாராஜா இறந்தபின் அவர் சுற்றத்தார் பரிவாரங்கள் எல்லாரும் தீராத் துக்கத்திலாழ்ந்தார்கள். அவருடைய படுக்கையை விட்டு விலகாது அவரருகிலேயிருந்த மஹாராணி அவர் பிராணன் போகுமளவும் அழுதுக்கொண்டிருந்தவள், பிராணன் போனவுடன் ஒருவித சாந்தமும் அமைதியும் அடைந்தார். அந்த அம்மணி துக்கசாகரத்தில் மூழ்கிய அத்தனை பேர்களுக்கு நடுவே இங்கும் அங்கும் சென்று உத்தரக்கிரியை நடப்பதற்கு வேண்டிய உத்தரவுகள் கொடுத்துக்கொண்டிருந்தார். பிறகு ஸர்தார்களையெல்லாம் கூட்டி கவரன்மெண்டு ஏஜண்டாகிய மிஸ்டர் க்ளாக்ஸ்டன் அவர்களையும் வரவழைத்து இன்ன இன்ன பெட்டிகளில் நகை

* 1900-ஆ ஆக்ஸ்டு மாசத்துச் சஞ்சிகையில் 'ஸஹகமனம்' என்னும் விஷயத்தைப் படித்துப்பார்க்க.

கள் இருக்கின்றன. இன்னவற்றில் உடுப்புகள் முதலானவை யிருக்கின்றன. இன்னவற்றில் மைனர்களான இராஜகுமாரர்கள்,' குமாரத்தியின் ஆடையாபரணங்களிருக்கின்றனவென்று சுட்டிக்காட்டி அவைகளை இன்னவிதமாக உபயோகிக்கவேண்டியதென்று சொன்னார். பிறகு தமது ஏகபுத்திரியின் விவாகத்தைப்பற்றிப் பேசி அதுவிஷயமாக ஆகவேண்டியவைகளுக்கெல்லாம் விவரமாக உத்தரவுகள் கொடுத்தார். பிறகு பணம்வைத்திருந்த இரண்டு பெட்டிகளைக் கொடுத்து அதிலுள்ள திரவியத்தை வட்டிக்கிட்டு அதன் வருமானத்தைத் தர்மவிஷயத்தில் செலவு செய்யவேண்டுமென்பது அவருடைய பர்த்தாவின் விருப்பமென்று தெரிவித்தார். கடைசியில் அங்கு கூடியிருந்தவர்களைப்பார்த்து "அவர் போய்விட்டார். இனி இருக்கிறவர்களைப் பார்த்துக் கொள்ள வேண்டியது உங்களுடைய கடமை. அவர்களிடத்து விசுவாசமாயிருந்து உதவுங்கள்" என்று சொல்லி அவருடைய பர்த்தாவின் பிரேதம் இருந்த அறைக்குட் சென்றார். அவ்வறைக்குட் போகும்பொழுது அவருடைய புத்திரர்கள் இருந்த ஒரு அறையின் வழியாகப் போகவேண்டியிருந்தது. அவருடைய பாலகுமாரன் அழுதுக்கொண்டு "அம்மா என்னை வந்து கட்டிக்கொள்" என்று சொன்னான். மஹாராணியவர்கள் தலையைத் திருப்பிக்கொண்டு அவர்களை ஆசீர்வதிக்குமாதிரியாகக் கையைத்தூக்கி வாழ்த்திவிட்டு அவருடைய பர்த்தாவின் பிரேதமிருந்த அறைக்குள் சென்றார். அங்குசென்று பிரேதமாய்க் கிடந்த அவருடைய பர்த்தாவை முத்தமிட்டுக்கொண்டு அவரது இடதுபக்கத்தில் படுத்துக்கொண்டார். படுத்துக்கொண்ட சில விநாடிகளுக்கெல்லாம் அவருடைய ஆத்மா தேகத்தைவிட்டுப்பிரிந்து ஏற்கனவே அசரீரியான அவருடைய பர்த்தாவோடு சேர்ந்து ஐக்கியப்பட்டுப்போய்விட்டது. "இந்த அம்மணி தன் பர்த்தாவுக்குப்பின் தானிருக்கப்போகிறதில்லையென்று எப்பொழுதும் சொல்லிக்கொண்டிருப்பாராம். காலம் வந்தபொழுது ஆத்மா உண்மையில் ஒன்றுபட்டுப்போயிருந்ததால் அப்படியே நேர்ந்தது. இப்படிப்பட்ட பதிவிரதா சிரோமணிகளே உண்மையான சதியென்று சொல்லப்படுவார்கள். இப்படிப்பட்டவர்கள் புண்யாத்மாக்களாக விருக்க வேண்டும். இவர்கள் சீக்கிரம் மஹாத்மாக்களாவார்கள்.

'தெய்வந்தொழா அள்கொழுநற்றொழுதெழுவான்
பெய்யெனப் பெய்யுமழை."

என்று திருவள்ளுவநாயனர் சிறப்பித்துச் சொன்னது இப்படிப்பட்ட பதிவிரதா சிரேஷ்டைகளுக்கே யொக்கும்.

S. S.

## சுருதி வாக்கியம்.

(மைத்திரேயோபநிஷத்.)

---

### மெய்யாராதனை.

"தேகமானது தேவாலயமென்று சொல்லப்படுகிறது. அதிலிருக்கிற ஜீவனானவன் சிவனே. அக்ஞானமாகிற நிர்மாலியத்தைத் தள்ளி அவன் "நான்" என்கிற பாவனையினாலே பூஜிக்கவேண்டியது. அபேதமாய்ப் பார்ப்பதுதான் ஞானம். மனது விஷயத்தை விட்டிருப்பது தியானம். *** சகலபாவனையையும், அதாவது தோற்றத்தையும், தள்ளி மிச்சமான தெதுவோ அதாக (பிர்ம்மமாக) ஆக்கக்கடவாய். பார்க்கிறவன், பார்வை, பார்க்கப்படுகிற வஸ்து இவைகளை வாசனையுடன் தள்ளிவிட்டு விளங்குகிற சிரேஷ்டமான ஆத்மாவையே பஜி" யென்று மைத்திரேயோபநிஷத் 2-வது அத்தியாயத்தில் சொல்லியிருக்கிறது.

### ஸ்வானுபவம்.

அப்படிப்பட்ட ஆத்ம ஸ்வரூபானந்தமுற்றவன் எப்படியிருப்பனென்றால் அவனுடைய ஸ்வானுபாவத்தை அடுத்த 3-வது அத்தியா

யத்தில் சவிஸ்தாரமாய் எடுத்துச்சொல்கிறார். அதாவது.—

"நானுயு மிருக்கிறேன். அந்நியனுயு மிருக்கிறேன். பிர்ம்மமாயு மிருக்கிறேன். உற்பத்தி காரணனுயு மிருக்கிறேன். சகலலோக குருவாயுமிருக்கிறேன். நானுகவு மிருக்கிறேன். ஸித்தனுயு மிருக்கிறேன். சுத்தனுயு மிருக்கிறேன். உத்தமனுயு மிருக்கிறேன். நானிருக்கிறேன். எப்போதும் அவனுக விருக்கிறேன். நித்தியனுகவும் நிர்மலனுகவு மிருக்கிறேன். விஞ்ஞானமாயிருக்கிறேன். விசேஷனுயிருக்கிறேன். சந்திரனுயிருக்கிறேன். சகலமுமாயிருக்கிறேன். மானுவமான மற்றவனுயிருக்கிறேன். மங்களகரமாயிருக்கிறேன். துவைதாத்துவைதமில்லாதவனு யிருக்கிறேன். துவந்தம் அதாவது இருமை யற்றவனுயிருக்கிறேன். அவனுக (பிர்ம்மமாக) இருக்கிறேன். பாவ, அபாவம் (இருக்கிறது, இல்லாதது) இல்லாதவனுயிருக்கிறேன். பாஷையற்றவனுயிருக்கிறேன். விளங்கிக்கொண்டிருக்கிறேன். சூனியாசூனிய மகிமையையுடையவனு யிருக்கிறேன். சோபனுசோபனனுயு மிருக்கிறேன். சுபனுயுமிருக்கிறேன். துக்கமில்லாதவனுயிருக்கிறேன். சைதன்னியமாய் (அறிவாய் அல்லது ஆத்மாவாய் அல்லது சாக்ஷியாய்) இருக்கிறேன். சமமாயிருக்கிறேன். இணையுள்ளவனுயும் இணையற்றவனுயு மிருக்கிறேன். நித்தியனுயும் சுத்தனுயும் சதாசிவனுயுமிருக்கிறேன். ஸர்வனுயுமிருக்கிறேன். ஸர்வமல்லாதவனுயுமிருக்கிறேன். ஸாத்துவிகனுயுமிருக்கிறேன். எப்போதுமிருக்கிறேன். ஒன்று என்கிற கணக்கற்றவனு யிருக்கிறேன். இரண்டென்கிற கணக்கற்றவனு யிருக்கிறேன். சத் அசத் என்கிற பேதமற்றவனுயிருக்கிறேன். சங்கற்பமற்றவனுயிருக்கிறேன். பலவென்கிற பேதமற்றவனுயிருக்கிறேன். அகண்டானந்த ஸ்வரூபியாயிருக்கிறேன். நானல்லாதவனுயு மிருக்கிறேன். அந்நியனுமல்லாதவனுயுமிருக்கிறேன். தேகாதிகளற்றவனுயு மிருக்கிறேன். ஆசிரியனுயுமிருக்கிறேன். ஆசிரியமற்றவனுயு மிருக்கிறேன். ஆதாரமற்றவனுயுமிருக்கிறேன். பந்தமோக்ஷ மற்றவனுயுமிருக்கிறேன். சுத்தமான பிர்ம்மமாயிருக்கிறேன். அவன் நானுகவிருக்கிறேன். சித்தம்முதலியவையற்றவனுயிருக்கிறேன். உத்தமனுயிருக்கிறேன். உத்தமோத்தமனுயு மிருக்கிறேன். எப்போதும் விசாரரூபனுயுமிருக்கிறேன். விசாரமற்றவனுயு மிருக்கிறேன். அவன் நானுகவிருக்கிறேன். அகார உகார ரூபனுயிருக்கிறேன். மகாரரூபனுயு மிருக்கிறேன், (சகலத்திற்கும்) முந்தினவனுயிருக்கிறேன். தியானிக்கிறவன் தியானம் இவைகளற்றவனுயிருக்கிறேன். தியானிக்கப்படத் தக்கவனல்லாதவனுயிருக்கிறேன். அவன் நானுக விருக்கிறேன். சகலத்திலும் பூர்ணஸ்வரூபமாயிருக்கிறேன். சச்சிதானந்த லக்ஷணமுடையவனுக விருக்கிறேன். ஸர்வதீர்த்த ஸ்வரூபியாயிருக்கிறேன். பரமாத்துமாவாயும் சிவனுயுமிருக்கிறேன். இலக்ஷியாலக்ஷியமற்றவனுயிருக்கிறேன், (குறிப்பிட்டுச்சொல்லத்தகுந்தவனு மல்ல, குறிப்பிட்டு சொல்லத்தகாதவனு மல்ல). நாசமற்ற பிர்ம்மமாயிருக்கிறேன். அளிக்கிறவனற்றவனுயு மிருக்கிறேன். அளவற்றவனுயுமிருக்கிறேன். அளக்கப் படுகிறவனல்லாதவனுயு மிருக்கிறேன். மங்களகரனுயிருக்கிறேன். நான் ஜகத்தல்ல. சகலத்தையும் பார்க்கிறவனுயிருக்கிறேன். கண்முதலியவை யில்லாதவன். எங்கும் பரவினவனுயிருக்கிறேன். ஞானியாயிருக்கிறேன். பிரசன்னனுய் (சாந்தம் அல்லது அமரிக்கையுள்ளவனுய்) இருக்கிறேன். (சகலபாபத்தை) ஹரிக்கிறவன் (போக்கடிக்கிறவன்) ஆயிருக்கிறேன். சகலகாரியத்தையும் செய்கிறவனுயு மிருக்கிறேன். சகலமான இந்திரியமற்றவனுயுமிருக்கிறேன். சகல வேதாந்தத்தினுலே (ஆத்மஸ்வரூபத்தினுலே) திர்ப்தியடைந்தவனுயிருக்கிறேன். எப்போதும் சுலபனுயிருக்கிறேன். சந்தோஷமுள்ளவனென்றும் சந்தோஷ மில்லாதவனென்றும் பெயரையுடையவனுயிருக்கிறேன். சகல மௌனத்திற்கும் பலனுயிருக்கிறேன், எப்

போதும் சின்மாத்திரஸ்வரூபனுயிருக்கிறேன். எப்போதும்சத்தாகிற சின்மயமாயிருக்கிறேன். யாதொன்றல்லாதவனுயிருக்கிறேன். அற்பங்கூட இல்லாதவ னல்லாதவனுயிருக்கிறேன். (அற்ப வஸ்துவிலும் அற்பகாலத்திலும் இல்லாதவ னல்லவென்பது கருத்து.) அஞ்ஞானமில்லாதவனுயிருக்கிறேன். ஹிருதய கமல மத்தியிலிருக்கிறேன். ஆறு * விகாரமற்றவனுயிருக்கிறேன். ஆறு † கோசங்களற்றவனுயிருக்கிறேன். ஆறு ‡ சத்துருக்களற்றவனுயிருக்கிறேன், உள்ளுக்குள்ளேயிருக்கிறேன். தேசகாலமற்றவனுயிருக்கிறேன். திக்குகளை வஸ்திரமாயுடைய சுகஸ்வரூபி. பெந்தமற்றவனுயும் விடுபட்டவனுயுமிருக்கிறேன். இல்லையென்பதில்லாதவன். அகண்டாகார ரூபனுயிருக்கிறேன். அகண்டாகாரமாயிருக்கிறேன். பிரபஞ்சத்திலிருந்து விடுபட்ட சித்தமுடையவனுயிருக்கிறேன். பிரபஞ்சமற்றவனுயிருக்கிறேன். சகலப்பிரகாசரூபனுயிருக்கிறேன். சின்மாத்திரஜோதியாயிருக்கிறேன். முக்காலத்திலிருந்து விடுபட்டவனுயிருக்கிறேன். காமாதிகளற்றவனுயிருக்கிறேன். சரீரமில்லாதவன். சரீரத்தையுடையவனல்லாதவன். குணமற்றவன், ஒன்றானவன். முக்தியற்றவன். முக்தனுயிருக்கிறேன். எப்போதும் மோக்ஷமற்றவனுயிருக்கிறேன். சத்தியாசத்தியாதிகளற்றவனுயிருக்கிறேன். எப்போதும் சத்தைக்காட்டிலும் வேறல்லாதவன். போகவேண்டிய தேசமற்றவன். போகுதல் முதலியன இல்லாதவன். எப்போதும் ஒரே ரூபமுள்ளவன். சாந்தனுயிருக்கிறேன். புருஷோத்தமனுயிருக்கிறேன். இப்படி எவனுக்கு சுவானுபவம் வந்திருக்கிறதோ அவன்தான் நான்; சந்தேகமில்லை. (இதை) ஒரு தடவையாவது எவன் கேட்கிறானோ அவன் பிரம்மமேயாகிறான். அவன் பிரம்மமேயாகிறான்.''

* பிறத்தல், இருத்தல், வளர்தல், திரிதல், குறுகுதல், நசித்தல் இவைகள் ஆறு விகாரங்கள். கருப்போபநிஷத்தும் வராஹோபநிஷத் முதலத்யாயமும் பார்க்க.

† தோல், உதிரம், மாம்சம், கொழுப்பு, ஊன், எலும்பு, இவைகள் ஆறுகோசங்கள். வராகோபநிஷத் முதல் அத்யாயம் பார்க்க.

‡ காமக், குரோத, லோப, மோக, மத, மாச்சரியம் இவைகளாறு சத்துருக்கள். வராகோபநிஷத் 2-வது அத்யாயம்பார்க்க.

## கௌன்ட் லியோ டால்ஸ்டாய்.

அவர் மரணுந்தகால அனுபவம்.

கௌன்ட் லியோ டால்ஸ்டாய் என்பவர் ருஷியதேசத்தவர்; மிகவும் பேர்போன கிரந்தகர்த்தா; தத்துவஞானி; பேரறிஞர்; உண்மையான கிறிஸ்துபக்தர். இவருக்கு வயது 70-க்கு மேலாய்விட்டது. இவர் யேசுகிறிஸ்துவின் உபதேசவாக்குகளை உண்மைபாய் உள்ளபடியுணர்ந்து உணர்ந்தபடி அனுஷ்டித்து வரும் மஹான். உண்மையில் தேவதாவிசுவாசமும் தெய்வபக்தியுமுள்ளவர்கள் வெளியாடம்பரங்களையே விசேஷமாகக்கருதி சத்திருக்க சக்கையையாடும் புல்லறிவாளரைப்போல் நடக்கும் சமயகுரவர்கள் எண்ணத்துக்கு ஒத்து நடக்கிறதில்லையென்பது உலகப்பிரசித்தியான விஷயம். இவர் உண்மையான பக்தரானுலும், ருஷியாதேசத்து சமயகுரவர் கூட்டத்தலைவர், இவருடைய எண்ணங்கள் பெரும்பாலார் கொள்ளும் கொள்கைக்கு ஏதோ விரோதமாகவிருக்கிறதென்று இவரை மதப்பிரஷ்டராக்கி மற்றவர்கள் இவர்களோடு கூட்டுறவு செய்யலாகாதென்றும் கொடுமை புரிந்துளார். டால்ஸ்டாய்பிரபு உண்மையில் அகப்பற்று நீக்கினவரும் மஹாதீரருமானதால் இம்மதக்குரவர் அதிகாரத்தை இலக்ஷியம் செய்யாமல், அதனுல் வரும் இக்கட்டுகளைப் பொறுத்துவருகிறார். இவர் சமீபகாலத்தில் நோவுற்று மரணுவஸ்தையிலிருந்து தெய்வகிருபையால் பிழைத்துள்ளார். இவரைச் சூழ்ந்துள்ள மகாவித்வான்களான டாக்டர்கள், இவருடைய தேகத்திலுள்ள கோளாறு இன்னதென்று அறிய வகையின்றி விழிப்பதை

யறிந்த இவர் அவர்களைப் பரிகாசம் செய்து தேகமே சாசுவதமென்று நம்பும் நீங்கள் மஹாவித்வான்கள்தான் : வைத்தியசாஸ்திரம் முற்றும் கற்றவர்தான் : ஆனால் நீங்கள் கற்ற வைத்திய சாஸ்திரத்திற்கு பரமார்த்தமான தத்துவம் ஒன்றும் தெரியாது. நீங்கள் என்ன செய்வீர்கள்.— என்று சொல்லிக் காட்டினதாகச்சொல்லப்படுகிறது. அவருக்கு மரணகாலம் கிட்டியதாகத் தோன்றியபொழுது அவர் தம்மைச் சூழ்ந்திருந்தவர்களைக் காணவில்லையென்றும், அவருடைய மனது மிகவும் சாந்தமடைந்து ஆனந்தவீட்டில் அமர்ந்திருந்ததென்றும், இந்தப்பிரபஞ்சவாழ்க்கையை விட மேலான பரமவாழ்க்கை தனக்குக் கிட்டுவதற்கு இந்த தேகம் விழுந்து போகாமல் இன்னுமிருப்பது அவருக்கு சங்கடமாக விருக்கிறதென்றும், இப்படி அவர் அனுபவத்தை அவருடைய் பிராண சிநேகிதர் ஒருவருக்குச் சொன்னாராம். இவர் அந்தியகாலம் கிட்டிய பொழுது தனக்கு காலம் கிட்டியதையுணர்ந்து தான் சீக்கிரம் போகவேண்டுமென்று சொன்னாராம். தேகஸ்திதி கொஞ்சம் அனுகூலப்பட்டபொழுது 'காலதாமதமாக'க்கடவுளருளிருப்பதாகச் சொன்னாராம். இவர் இப்பொழுது படுக்கையை விட்டெழுந்திருக்கும் படியான ஸ்திதியிலிருக்கிறார். தேகதிடம் பெற்றதும், மரணத்தைக்கண்டு ஜனங்கள் பயந்து நடுங்குகிறார்களே, மரணகாலத்தில் உண்டாகும் ஆனந்தம் சொல்லி முடியாததாயிருப்பதால் அதைக்குறித்து ஜனங்கள் பயப்படாதபடி தம்முடைய அனுபவத்தைக் கொண்டு ஒரு புஸ்தகம் எழுத உத்தேசிக்கிறாராம். வேதாந்த விசாரம் செய்து தேறிய பிரமவித்துக்களான பெரியோர்களுக்கு இவருடைய அனுபவம் பரிபூர்ண நிலைக்குக் குறைவுபட்டதாகத் தோன்றுமாயினும், இவருடைய நடத்தையினால் இவர் மிகவும் உண்மையான தெய்வ பக்தர் என்பது மிகஸ்பஷ்டமாய் விளங்கும். இவ்வுலகத்திலுள்ள ஜனத்தொகை மொத்தத்தில் மூன்றிலொருபங்கு ஜனங்கள் கிறிஸ்துவை நம்பி அவரை வழிபட்டுவருகிறவர்களாக விருப்பினும் அம்மகாத்மா போதித்த உண்மையான தத்துவ விசேஷங்களை உள்ளபடி யறிந்தவர்கள் வெகு அபூர்வமாகவே யிருக்கிறார்கள். அவர்களிற் பெரும்பாலார் தங்கள் பேதைமையால் தாங்கள் கெட்டுப்போவதுமன்றி உண்மை யறிந்தவர்களையும் உபத்திரவம்செய்து வீண்கொடுமைக் காளாகிறார்கள். இது உலகத்திலெங்கும் வழக்கமாகவே யிருக்கிறது.

## குழந்தைகளின் வளர்ச்சி.

பிறந்த குழந்தை சௌக்கியமாயிருந்து அதற்கு ஆகாரமும் சரியாகக் கொடுக்கப்பட்டுவந்தால் 6-மாசத்தில் அதன் நிறை பிறந்தபொழுது இருந்ததைவிட இரண்டு பங்காகவும் ஒரு வருஷத்தில் மூன்று பங்காகவும் அதிகப்படவேண்டியது. குழந்தை முதல் வருஷத்தில் மாசம் ஒன்றுக்கு ஒரு பவுண்டுவிகிதமும் இரண்டாவது வருஷத்தில் மாதம் ஒன்றுக்கு 6-அவுன்ஸ் விகிதமும் நிறையதிகரித்து வரவேண்டும். இல்லாவிட்டால் அதற்குக் கொடுக்கப்பட்டுவரும் ஆகாரம் திருப்திகரமானதல்லவென்று தீர்மானிக்கவேண்டுமென ஒரு டாக்டர் ஆங்கிலேய சுகாதாரப்பத்திரிகை யொன்றில் எழுதியிருக்கிறார். அதன் வளர்ச்சி முதல் வருஷத்தில் மாசத்துக்கு$\frac{3}{4}$அங்குல விகிதமும் இரண்டாவது வருஷத்தில் மாசத்துக்கு $\frac{1}{2}$-அங்குல விகிதமுமாக உயரவேண்டுமென்றும் அப்படிக்கில்லாவிட்டால் அதன் வளர்ச்சி திருப்திகரமானதல்லவென்றும் சொல்கிறார். வளர்ச்சி சற்று முன் பின்னாக விருந்தாலும் நிறைமட்டும் சொன்னபடி யதிகரித்து வரவேண்டியது முக்கிய மென்கிறார். குறைமாசத்தில் பிறந்த குழந்தைகள் அவ்வளவு திடமாக வளராது. ஆனாலும் வளர்ச்சியின் பிரமாணம் மேற்குறித்த படியே யிருக்குமென்கிறார்.

### THE ORGIN OF LIFE.

## ஜீவோற்பத்தி.

ஜீவஜந்துக்களில் மேலான மனிதனை அவற்றில் கடையான அமீபா வரையில் தொடர்ந்துகொண்டு போய், அதி யற்புதமான மனிததேகம், அமீபாவைப் போன்ற அனேகம் 'ஸெல்கள்' சேர்ந்ததேயன்றி வேறல்லவென்று தீர்மானித்தார்கள். ஜீவோற்பத்தியைக் கண்டுபிடிக்க முயற்சித்ததில் ஒரு ஜீவனிலிருந்து ஒன்று உற்பத்தியானதாகக் கண்டார்களே யன்றி அந்த மூலஜீவனின் உற்பத்தியை வைத்திய சாஸ்திர விற்பன்னர்கள் இன்னும் கண்டுபிடித்தார்களில்லை. உயிரிலிருந்து உயிருற்பத்தி யாகிறதென்று மட்டும் கண்டுபிடிக்கக்கூடியதா யிருந்ததேயன்றி, எவ்வளவ் அணுப்பிரமாணமான ஜீவஜந்துவும் உயிருள்ள வேறொரு அணுவிலிருந்துண்டாகி வளர்ந்ததைத்தவிர அந்த மூலவஸ்துவிலுள்ள உயிர் எப்படி யுண்டாயிற்றென்று திர்ப்திகரமாகக் கண்டுபிடித்தார்களில்லை. ஜடவஸ்துவிலிருந்து ஜீவனுண்டானதை யாரும் கண்டதில்லை அணுப்பிரமாணமான ஒரு ஜீவஜந்துவிலிருந்து மனிதன்வரையிலுள்ள ஜீவஜந்துக்கள் உண்டாயிருப்பதைமட்டும் சங்கிலித்தொடர்போல் ஒன்றைத்தொட்டு ஒன்றை ஆராய்ந்துகொண்டுபோய்க் கண்டுபிடித்திருக்கிறார்கள்.

---

## ஸ்ரீமத் வால்மீகி ராமாயணம்.

### சுந்தரகாண்டம்.

மந்திரங்களி லெல்லாம் சிறந்தது காயத்ரி மந்திரம். அந்த மந்திரத்தின் அருத்தம் ஸ்தூலமாகப் பார்த்தால் சூரியனைக்குறித்த துதிபோலத் தோன்றும். நுட்பமாக ஆழ்ந்துபார்த்தால் "ஜோதியுள் ஜோதியுள் ஜோதி" யாகும் ஸ்வயம்பிரகாச பிரம்ம ஸ்வரூபத்தியானமாகும். இதனால்தான் அது மந்திரங்கள் எல்லாவற்றிலும் சிறந்ததென்று சொல்லப்படுகிறது. அப்படியே இராமாயணகிரந்தம் கிரந்தங்களிலெல்லாம் சிறந்தது காயத்ரி மந்தரத்தின் கருத்தையே வால்மீகி பகவான் மிகவிரித்து இராமாயணக்கதையாக எழுதினர் என்பது மேலோர் அபிப்பிராயம். காயத்ரிக்கு 24-எழுத்துக்களிருக்க இராமாயணத்தில் 24-ஆயிரம் சுலோகங்கள் இருக்கின்றன. காயத்ரி மந்திரத்தை ஸப்தவியாகிருதிகளென்று ஏழு பிரிவுகளாகப் பிரித்திருக்கிறார்கள் அதுபோலவே இராமாயணம் ஸப்தகாண்டங்களாகப் பிரிக்கப்பட்டிருக்கிறது. காயத்ரி மந்திரத்துக்கு ஸ்தூல அர்த்தம் தத்துவார்த்தம் என்று இரண்டு இருப்பதுபோல இராமாயணத்திற்கும் பதார்த்தம் தத்துவார்த்தமென இரண்டுண்டு. பதார்த்தப்படி அது சூரியகுல அரசனான ஸ்ரீ இராமர் சரித்திரமானாலும் தத்துவார்த்தமாகப் பார்த்தால் பரமாத்மஸ்வரூபத்தை விளக்கும் திவ்வியகதையாக விளங்கும். இதை வாசிக்க வாசிக்க அர்த்தம் புதிது புதிதாக் கப்படும். மனுஷனுடைய எந்த நிலையிலும் நேரிடும் அவஸ்தைகளுக்கு ஒப்பான நிலைமைகளும் அப்பொழுது நடந்துகொள்ள வேண்டிய விதமும் இதற்குள் கிடைக்கும். இந்த கிரந்தத்தின் சிறப்பை இதற்கு முன் இப்பத்திரிகையில் விவரித்திருக்கிறோம். இராமாயண பாராயணத்தின் மகிமையையும்பற்றிச் சொல்லியிருக்கிறோம். இராமாயணம் ஸப்தகாண்டங்களில் சுந்தரகாண்டம் மிக விசேஷமானது. பாராயணத்துக்கு ஸர்வோத்கிருஷ்டமானது. ஹிந்துக்களில் இராமாயணபாராயணம் செய்யாதவர்கள் வெகு அபூர்வம். பாராயணம் செய்வதற்கு வேண்டிய படிப்பில்லாதவர்கள் சிரவணம் செய்தாவது புண்ணியந் தேடிக்கொள்வார்கள். இப்பொழுது படிப்பு மேலிட்டுவருங்காலத்தில் யாவரும் சுவபாவமாக வாசித்து அதனுட்கருத்தைக் கிருகித்துக்கொள்ள விரும்புகிறார்கள். இவர்களுடைய சௌகரியார்த்தம் இராயவேலூர் கன்னையநாயடு அவர்களும் அவருடைய மைத்துனர் இராயவேலூர் இராமசாமிநாயடு அவர்களும் மிகவும் பாராயணயோக்யமான சுந்தர காண்டத்தை பதார்த்தத்தோடு, தெலுங்கெழுத்தில் சுலோகங்களையும், அதற்குக்கீழ் தமிழ் அக்ஷரங்களில் அந்த சுலோகத்தின் அன்வயமும், அதன் கீழ் பதார்த்தங்களும் முறையே விளங்க, சுத்தமாக அச்சிட்டு கித்தான் கட்டடம்செய்து வெளிப்படுத்தியிருக்கிறார்கள். அன்வயம் என்கிற வசனநடையும், பதார்த்தங்களும் மேல்பார்க்கம் தாததேசிக தாதாசாரிய சுவாமிகளாலும், கொ. ஸ்ரீனிவாசராகவாசாரியரவர்களாலும் தமிழில் மொழிபெயர்க்கப்பட்டிருக்கின்றன. இடை இடையே படங்களும் சேர்க்கப்பட்டிருக்கின்றன. தெலுங்கு அக்ஷரம் தெரிந்தவர்களுக்கு இது பாராயணம்செய்ய மிகவும் உபயோகமான புஸ்தகமாகும். முற்காலங்களில் இராமாயண பாராயணம் செய்ய விரும்புகிறவர்கள், மாதம் இவ்வளவென்று பண்டிதர்களுக்குச் சம்பளம் கொடுத்து அவர்களைக் கிட்ட வைத்

துக்கொண்டு அர்த்தங்கேட்டு இராமாயணம் வாசிப்பது வழக்கம். இப்பொழுது அச்சுவேலை மலிந்திருக்கும் காலத்தில் எதுவும் சுலபமாக அச்சியந்திரமூலமாய்ச் சாதிக்கத்தக்கதாக விருக்கிறது. 5-ரூபாய்க்கு இப்பொழுது ஒவ்வொருவரும் ஒரு புஸ்தகம் வாங்கிவைத்துக்கொள்ளலாம். வைத்துக்கொண்டால் நினைத்தபோதெல்லாம் பண்டிதசகாயமே கிடைக்கும். எதையும் உட்கருத்துணர்ந்து விவேகத்தோடு செய்தாலன்றிப் பயனில்லை. ஆதலால் இராமாயண பாராயணமும் அதன் அர்த்தத்தை யுணர்ந்துசெய்வதே விசேஷமானது. அதற்கு இப்புஸ்தகம் மிகவும் சாதகமானதாக விருக்கிறது. வேண்டியவர்கள் மைலாப்பூர் தீபாலாபீசுக் கருகிலிருக்கும் இராயவேலூர் கன்னையநாயுடு அவர்களுக்கு எழுதிப் பெற்றுக்கொள்ளலாம்.

# சிறுவர்க்கான பக்கம்.

[விவேகசிந்தாமணியை வாசிக்கும் சிறுவர் சிறுமிகளுக்காக எழுதப்பட்டது.]

## சகவாசதோஷம்.

சகவாசம் என்றால் உடன் வசித்தல்; அதாவது உடனிருந்து நெருங்கிப் பழகுதல். புல் பூண்டு முதல் புள், மிருகம், மனுஷனீறாக எல்லாரும் சகவாச தோஷத்தால் பாதிக்கப்படுகிறார்கள். நிலவாசி, நீர்வாசி, காற்றுவாசியினால் செடி கொடிகள் பாதிக்கப்படுகின்றனவென்பது பிரத்தியக்ஷம். இந்த உபாயத்தால் செடிகளின் தோற்றத்தைக்கூட மாற்றி விடுகிறார்கள். பிராணிகளும் அப்படியே சகவாச தோஷத்துக்குட்பட்டனவாக விருக்கின்றன. மனுஷனது குணம் அவன் சகவாசத்தைப் பொறுத்ததென்பது பிரசித்தம். "உன் தோழனைக்காட்டு உன் குணத்தைச் சொல்கிறேன்" என்று சொல்லும் மூதுரையில் பொதிந்து கிடக்கும் உண்மை இதுவே. குழந்தைகளை வளர்ப்பதில் கெட்டசகவாசம் கூடாமற் பாதுகாப்பது பெற்றோர் கவனிக்கவேண்டிய முதற்கடமையாக விருக்கிறது. நம்மவர்களில் புத்தியில்லாத் தாய்மார்களும் அத்தை, பாட்டி, கிழம், கட்டைகளும் குழந்தைகள் வீணுத்தெரியாதவர்களென்று அவர்களை அடிக்கடி பொய் புளுகுகள் சொல்லி ஏமாற்றுகிறார்கள். குழந்தைகளைப்போல் குணத்தைக் கிரகிக்கும் சக்தி பெரியோர்களுக்குக் கிடையாது. அவர்களுடைய மனம் வெளித்தோற்றத்துக்கு விஷயங்களைக் கிரகிக்கும் சக்தியற்றவையாக விருப்பினும், விஷயவாசனைகளை முற்றும் கிரகிக்கும்படியான சக்தி விசேஷமாக வுண்டு என்னும் உண்மையை இவர்கள் அறியவேண்டும். எப்படி பாலானது காற்றிலுள்ள அசுத்தவாசனைகளைக் கிரகிக்கிறதோ அப்படி குழந்தைகளின் இளமனம் விஷயவாசனைகளைக் கிரகிக்கின்றது. சிறு குழந்தைகளிடத்தில் துர்க்குணங்கள் விசேஷமாகப் படிந்திருந்தால் அக்குழந்தையைச் சுற்றியிருந்தவர்கள் துர்க்குண நிறைந்தவர்களென்று சந்தேகமறத் தீர்மானிக்கலாம். விஷயங்களைவிட விஷயவாசனை பலமானது. கிளைகளைவிட வித்து எப்படி அதிக சக்தியை யுள்ளடக்கிக் கொண்டிருக்கிறதோ அப்படி விஷயங்களைவிட விஷயவாசனை விசேஷ சக்தியுள்ளதாக விருக்கிறது. சுவரிடுக்குகளில் வித்து விழுந்தது தெரியாமல், செடிகள் முளைக்கும்பொழுது அங்கு அச்செடியின் வித்து எப்படியோ சேர்ந்திருக்கவேண்டுமென்று எங்ஙனம் தீர்மானிக்கிறோமோ அப்படியே குழந்தைகளிடத்தில் துர்க்குணங்கள் வெளியாகும்பொழுது கெட்ட வாசனை அவர்கள் மனதில் இதற்குமுன் சகவாசதோஷத்தால் படிந்திருக்கவேண்டுமென்று தீர்மானிக்கத்தக்கதாயிருக்

கிறது சுவரிடுக்குகளில் முளைக்கும் செடிகள் எப்படி ஜல்லி வேரோடி சுவற்றின் கற்களை யெல்லாம் வெவ்வேறாகப் பிரித்துவிடுகிறதோ அப்படியே கெட்ட சகவாசத்தினாலுண்டாகும் வாசனாதோஷம் குழந்தைகள் மனதில் வேரூன்றிபடர்ந்து அவர்கள் குணத்தையெல்லாம் கெடுத்துவிடுகிறது. ஆகையால் குழந்தைகளிடத்தில் துர்க்குணம் வெளியாகும்பொழுது அவர்களுடைய சகவாசம் கெட்டதாயிருக்கவேண்டுமென்று ஆராய்ந்து கெட்ட சகவாசத்தை வாசனையற நீக்கவேண்டும். சகவாசத்தை நீக்காமல் குழந்தைகளைக் கண்டித்துச் சீர்திருத்திவிடலாமென்று எண்ணுவது, வேரிருக்கச் செடியின் கிளைகளை யொடித்துவிட்டால் அது அற்றுப்போமென்று நினைப்பதுபோலாகும். செடியை எப்படி வேரோடுகளையவேண்டுமோ, அப்படி துர்க்குணங்களை வாசனையோடு அறநீக்கவேண்டும். விஷய வாசனை இரண்டுவிதம். சகவாச தோஷத்தாலுண்டாவது ஒன்று; பூர்வஜன்மகர்மத்தால் உண்டாவது ஒன்று. சகவாச தோஷத்தாலுண்டாகும் வாசனையானது கெட்ட சகவாச மின்னதென்று ஆராய்ந்து நீக்கப்போகும். பூர்வஜன்மகர்மத்தாலுண்டான வாசனை அப்படி நீக்கத்தக்கதல்ல. அது அந்த வாசனைக்கெதிரான நல்லவாசனைகளைப் பழகுவதால் நிரோதிக்கப்படும்; அதாவது முளைக்காது அடக்கப்பட்டு வாசனாக்ஷயத்தால் நாசமுறும். இக்கருத்தைக்கொண்டேதான் ஞானமார்க்கத்தில் பிரவேசித்து மோக்ஷத்தை யிச்சிக்கும் முமுக்ஷுக்களுக்கு சத்சங்கம் ஒரு இன்றியமையாச் சாதனமாகச் சொல்லப்பட்டிருக்கிறது. இந்தப் பூர்வகர்ம வாசனையைப்பற்றிப் பேசுவது சிறுவர் மனதிற்கு எட்டாத விஷயமா யிருக்குமாதலால் அதைவிட்டு, சகவாச தோஷத்தால் விளையும் பெருந்தீங்கை விளக்கிக்காட்ட ஒரு சிறு கதை சொல்கிறேன். அதைக் கவனமாய்க்கேட்டு கெட்ட சகவாசத்தாலுண்டாகும் தீங்கை யறிந்து அப்படிபட்ட தீமைவிளையாதபடி இதை வாசிக்கும் ஒவ்வொருவரும் ஜாக்கிரதையாயிருக்கவேண்டுமெனக் கோருகிறேன்.

---

சிங்கமும் நரிக்குட்டியும், அல்லது
சகவாச தோஷத்தால் நேர்ந்தகேடு.

ஒரு காட்டிலே ஒரு சிங்கம் தன் பெண்சாதியோடும் இரண்டு பிள்ளைகளோடும் வாழ்ந்துகொண்டிருந்தது, மிருகேந்திரனாகிய அச்சிங்கம் ஒருநாள் காடுமுழுமையும் சுற்றி நாலு திசையிலுந் திரிந்துபார்த்தும் இரையகப்படாமல், வாடிவதங்கிப் பசியினால் மெலிந்து தளர்ந்து வருத்தப்பட்டு இன்றைக்கு ஒரு மிருகமாவது நம் கண்ணுக்குத் தென்படவில்லையே யென்று விசனத்தோடு வீட்டுக்குத் திரும்பிவருகையில், ஒரு புதரில் நாலைந்து நாளான நரிக்குட்டி யொன்று படுத்திருக்கக் கண்டது. கண்டு, அதை வாயிலே கௌவிக்கொண்டு தன் பெண்சாதி யிடத்தில்வந்து நரிக்குட்டியைக் கீழேவிட்டுப் பின்வருமாறு பேசலுற்றது — "பெண்ணே, இன்றைக்கு நான் யார்முகத்தில் விழித்தேனோ இந்த அகன்ற காட்டில் நாலுதிக்கிலுஞ் சென்று, நுழையாதவிடமெல்லாம் புகுந்து, தேடாதவிடமெல்லாம் தேடிப்பார்த்தேன். எங்கும் ஒரு பிராணியும் அகப்படாமல், இன்றைக்குப் பட்டினியாய்க்கிடந்து மடியவேண்டுமென்று நினைத்துக்கொண்டு வருகிறபோது, வழியில் இந்த நரிக்குட்டியைக் கண்டெடுத்துக் கொண்டுவந்தேன். நான் ஆண் பிறப்பாகையால், ஒரு நாள் இரு நாள் பட்டினியாயிருக்க எனக்குத் தென்புண்டு. மேலும் இந்த நரிக்குட்டி என் பசிக்கு எவ்வளவு? அது வயிற்றுக்குள்ளே போகாமல் பல்லிடுக்கிலேதானே புகுந்துகொள்ளும். ஆயினும் பெண்ணே, அந்தக்குட்டியைப் பார்க்கிறபொழுது எனக்குப் பரிதாபமாயிருக்கிறது. அதன் இளந்தசையைப் புசிக்க எனக்கு மனங்கொள்ளவில்லை. நீயோ அப்படியல்ல; ஒரு பெண்பிறப்பு பசிதாளமாட்டாய்; மேலும் நீ இப்போது பிள்ளைபெற்று பச்சையுடம்பா யிருக்கிறாய்;

பசியோடிருந்தால் பிள்ளைகள் வதங்கிச் சாகும். ஆகையால் அந்தக்குட்டியைச் சாப்பிட்டுப் பசிதீர்ந்து திருப்திபடைவாய்" என்றது. இப்படிச்சொன்ன, ஆண் சிங்கத்தைப்பார்த்துப் பெண் சிங்கம், "என் வீரகேசர மன்னவா! என்ன வார்த்தை சொல்கிறீர்! போர்க்களத்திற்புகுந்து பின்முதுகு காட்டாமல் மாரில் குண்டுவாங்கி மடிந்து போகிறவரையில் பொருதுகிற கல்லான மனம் உமக்கிருந்தும் இந்த நரிக்குட்டியைச்சாப்பிட உமக்கு மனங்கொள்ளவில்லை யென்று சொல்லுகிறீரே! இதைச் சாப்பிட எனக்கு எப்படி மனங்கொள்ளும். நானே இளகினமனதுடைய பெண் பிறப்பாச்சே! மேலும் பால் குடிக்கிற இரண்டு பிள்ளைகள் என் மடியில் விளையாடிக் கொண்டிருக்க அவற்றைப்போல் பால் குடிக்கிற இந்தக்குட்டியைக் கொன்று தின்பதற்கு எனக்கு மனங்கொள்ளவில்லை. ஆகையால் இந்தக்குட்டியை நமது பிள்ளைகளோடு வளர்த்துப்பார்ப்போமே" என்றது. ஆண் சிங்கம் "அப்படியே செய்வாய்" என்று சம்மதிக்க, அன்று முதல் சிங்கக்குட்டிகளும் நரிக்குட்டியும் ஒருதாய்வயிற்றுச் சகோதரரைப்போல் ஒன்றைவிட்டொன்று பிரியாமல் வளர்ந்துவந்தன. இப்படி இணைபிரியாது வளர்ந்துவந்த சிங்கக்குட்டிகளும் நரிக்குட்டியும் ஒரு நாள் வேட்டைக்குப்போன விடத்தில் அங்கே ஒரு யானைக்குட்டி திசைதப்பி வந்துவிட்டது. அந்த யானைக்குட்டியை நரிக்குட்டி கண்டவுடனே கையும் காலும் உதரலெடுத்துக் கொண்டு இப்படிப்பட்ட காத்திரமான தேகத்தையுடைய மிருகத்தை இதுகளும் பார்த்திராதபடியால் திகில்பிடித்து தன் தம்பிமாராகிய சிங்கக்குட்டிகளை விட்டுவிட்டு ஓட்டம் பிடித்து ஒரு புதரிற்குள்ளிருந்த தளையிற் போய்ப் பதுங்கிக்கொண்டது. தமயனாகிய நரிக்குட்டி ஓட்டம் பிடித்ததைப் பார்த்து தம்பிகளாகிய சிங்கக்குட்டிகள் தங்கள் தாயாரிடத்திற்போய் நடந்த சங்கதிகளைச் சொல்ல, தாய் சிங்கக்குட்டிகளை நோக்கிச் சொல்லலுற்றது:—"என் வீரனுக்குப்பிறந்த சூரர்களே, நீங்கள் மூடத்தனஞ் செய்தீர்கள். இதை உங்கள் தகப்பன் கேட்டால் உங்களைத் தண்டிப்பார். ஏனென்றால் ஓடியொளித்த உங்கள் சகோவானவன் போர்க்களமறியாதவன்; யுத்தவரிசை தெரியாதவன்; மேன்குலத்திற் பிறந்தவனல்ல; வேலைசெய்து பிழைக்கிற சின்னச்சாதி. நீங்களோ அப்படிப்பட்ட சின்னச்சாதியல்ல: இராஜகுலத்திற் பிறந்தவர்களாயிற்றே. நீங்கள் என் வயிற்றிலிருந்த போது உங்களை முக்கிப்பெற்றெடுக்க எனக்குச் சத்துவமில்லாமல் யானைக்காட்டிற் போயிருந்தேன். அங்கே யிருக்கிற யானையின் வாசனை பட்டவுடனே நீங்கள் என் வயிற்றிலிருந்தபடியே யானைமேற்பாய்ந்து மத்தகத்தைப் பிளந்து இரத்தத்தைக்குடித்து வெளிப்பட்டீர்களே. இப்பொழுது அந்த இராஜகேசரிக்குரிய வீரசூரவன்மை யுங்களை விட்டெங்கே போயிற்று? இது உங்களாலே வந்தகுற்றமல்ல என்னாலே வந்தகுற்றந்தான் நான் அந்த சின்னச்சாதியை என் குடும்பத்தில் சேர்த்தபடியால் என் குடும்பத்திற்குத் தீங்குவந்தது. அதனுடைய சகவாசத்தினாலே உங்களுடைய வீரசூரவான்மை குறைந்துபோயிற்று. நீங்களும் கையிலகப்பட்ட யானைக்குட்டியைவிட்டு வெறுங்கையோடே வந்து நின்றீர்கள். இனிமேல் அந்த சின்னசாதியினுடைய சகவாசம் உங்களுக்கிருக்கக்கூடாது: அதுவும் நம்முடைய வீட்டுவழி வரக்கூடாது."—என்று சொல்லி நரிக்குட்டியை யழைத்து நன்றாயடித்துத் துரத்திவிட்டது. பெண் சிங்கம் பெருந்தன்மையுள்ளதால் அந்த நரிக்குட்டியால் தன் குடும்பத்துக்குத் தீங்குவந்தபொழுதும் அதை சின்னச்சாதி யென்றறிந்து நீக்கிவிடமட்டும் தீர்மானித்தது. அது தன் வயிற்றுப்பால் குடித்து வளர்ந்த காரணத்தாலும் கருணைமிகுதியாலும் அதை தீங்கு விளைத்ததென்று கொன்று தின்னாமல் அடித்துத் துரத்துவதோடு திர்ப்தியடைந்தது. இதனால் பெரியோர் பெருந்தன்மையும் சிறியோர் சகவாசக்கேடும் நன்றாக விளங்கியது.

மாயாண்டி.

## விவேகசிந்தாமணிப் பிரசுரங்கள்.

இவை ஒவ்வொன்றும் நாணயமான இங்கிலீஷ் பைண்டு செய்து கில்ட் எழுத்துகள் பதித்துள்ளன.

**மாக்ஷிமைதங்கிய இந்தியா சக்கிரவர்த்தினியாகிய விக்டோரியா மஹாராணியவர்கள் சரித்திரம்.** 27-படங்களோடும், இந்தியா கவர்ன்மெண்டு, 'இந்தியா ஆபீஸ்' இவைகளின் அமைப்பு, அமுல்செலுத்தும் முறை விவரங்களோடும் பிரசுரிக்கப்பட்டிருக்கிறது. விலை ரூ. 1-4. V. P. P. ரூ. 1-8. அதிக கில்ட் கொடுத்தது ரூ. 1-6. V. P. P. ரூ. 1-10.

**புத்தாது திவ்விய சரித்திரம்.**—விலை அணு 14. V. P. P. ரூ. 1-2. அதிககில்ட்கொடுத்தது : ரூ. 1. V. P. P. மூலமாக ரூ. 1-4.

**விவேகமஞ்சரி.**—புஸ்தகம் 1. இதிலடங்கியவை : (1) கோல்பர்ட்சரித்திரம். (2) சத்தியதேவதைக்கதை. (3). சிவாஜிமஹாராஜா சரித்திரம். விலை அணு 14. V. P. P. ரூ. 1-2 அதிக கில்ட்கொடுத்தது : ரூ. 1. V. P. P. ரூ. 1-4.

இம்மூன்று புஸ்தகங்களும் கில்ட் எழுத்துகளின்றி காலிகோ கட்டடம்செய்து தனித்தனியாகவும் கிடைக்கும் :

(1) கோல்பர்ட் சரித்திரம் : துணிவியாபாரிகடையில் இருந்து முதல்மந்திரிஸ்தானத்துக்குவந்தவாலிபன்கதை. விலை அணு 5. V. P. P. அணு 8.

(2) சத்தியதேவதைகதை : விலை அணு 5. V. P. P. மூலமாக அணு 8.

(3) சிவாஜி மஹாராஜாசரித்திரம் : விலை அணு 6. V. P. P. மூலமாக அணு 9.

**ஆபத்துக்கிடமான அபவாதம் அல்லது கமலாம்பாள் சரித்திரம்.** விலை ரூ. 1-8. V. P. P. ரூ. 1-14. அதிக கில்ட் கொடுத்தது : ரூ. 1-12. V. P. P. ரூ. 2-2.

**விவேகரஸத்தாலாட்டு.** 6 பை. தபாற்கூலி 6 பை.

வேண்டுவோர் சென்னை திருவல்லிக்கேணி அ. ப. ஏஜன்ஸி, காரியதரிசி ஸி. வி. சாமிநாதய்யர் அவர்களுக்கு எழுதிப் பெற்றுக்கொள்ளலாம்.

### கமிஷனுக்கு விற்கப்படும் புஸ்தகங்கள்.

| | | |
|---|---|---|
| மாலதிமாதவம் | ... | ... விலை அணு 5. |
| தீனதயாளு... | ... | ... " " 8. |
| கல்வி விளக்கம் | ... | விலை ரூபா 1-0-0. |

தபாற்கூலி பிரத்தியேகம்.

*Apply to the D. K. Agency, Triplicane, Madras.*

### Photographs of Temples and Idols of Southern India.

*Hindu Temples:*—1. Srirangam, Saptaprakaram. 2. Conjeeveram, Varadarajaswami Temple. 3. Dakshana Badarikasramam or Melkota. 4. Somanadhapuram Temple. 5. Tanjore, Brihadiswaran Temple. 6. Tirukkudanthai or Kumbakonam, Sarangapani Temple. 7. Ghatikachalam or Sholingar: (i) Narasimhaswami Hill and (ii) Anjaneyaswami Hill. 8. Chidambaram, Nataraja Temple. 9. Madura, Minakshi Temple, full view from Northern Street.

SIZE 12 in. by 14 in.

**Price Rs. 2, per copy, postage and V. P. Commission extra.**

*Perumals, &c:*—1. Varadarajaswami of Conjeevaram, Garudautsavam, Gopuradarsanam 2. The same with all the jewels on the Tiruvavataram day. 3. Perundevi Tayar of Conjeeveram. 4. Tirunarayanapuram or Melkota. Chellapillai with all jewels and with Upayanachchiyar. 5. Tirumaliruncholai Perumal or Kallalagar, on the day of Chitrapournami, decorated as a robber. 6. The same, on the next day with Rajathirkkolam. 7. Mannargudi, Rajagopalan or Rajamannar, E'kanthasevai 8. The same, Asthanam with Upayanachchiyar. 9. Madura Minakshi. 10. Kanchi Kamakshi. 11. Nataraja, Arudradarisanam. 12. Tirukkudanthai or Kumbakonam Aravamuthan decorated in four ways. 13. Komalavalli Tayar of the same place. 14. Sr ghatikachalam or Sholingar, Anjaneyaswami with four hands. (No other temple has this kind of murti). 15. Tiruvallur Viraraghavar.

Also of Paramahamsa Ramakrishna, Swami Vivekananda, Swami Saradananda, Mrs. Annie Besant, Madam Blavatsky, Col. Olcott.

**Cabinet size. Price Re. 1 per copy, postage and V. P. commission extra.**

## Ready for Sale.

Photo of Lord Ampthill and his staff at Conjeeveram taken with the permission of His Excellency. Also, several Picturesque Sceneries of Lower and Upper Tirupati.

To be had of T. G. APPAVU MUDALIYAR & SON,
*Photographers and Artists,*
*Triplicane, Madras.*

(REGISTERED-NO. M. 108.)

VOL. X.] AUGUST, 1901. [No. 4.

# THE VIVEKA CHINTAMANI

## A MONTHLY TAMIL MAGAZINE AND REVIEW.

DEVOTED TO THE DIFFUSION OF GENERAL KNOWLEDGE.

# விவேகசிந்தாமணி

அறிவைப் ÷ பரவச்செய்வதற்கான ÷ மாதாந்தரத் ÷ தமிழ்ப்பத்திரிகை.

"அறிவுடையா ரெல்லா முடையா ரறிவிலா
ரென்னுடைய ரேனு மிலர்."—குறள்.

CONTENTS. PAGE.



அட்டவணை. பக்கம்.



Thick Paper Edition for Patrons.] PUBLISHED BY [Minim ım Subscripcion Rs. 5.

C. V. SWAMINATHA AIYAR,

Secretary, Diffusion of Knowledge Agency, Triplicane,

MADRAS.

Thin Paper Edition for the People. Price of Single Copy As. 6.]



[Subscription Price: Yearly Rs. 4; If Paid Half-Yearly Rs. 2-2.

FOR FULL TERMS OF SUBSCRIPTION SEE INSIDE.

EDITORIAL AND PUBLISHING OFFICE: VANI VILAS, TRIPLICANE.

PRINTING OFFICE: GRAVES, COOKSON & CO., POPHAM HOUSE, BROADWAY.

## Notice to Subscribers.

**Subscribers to the Viveka Chintamani are earnestly requested to remit their subscriptions in advance before 30th June. All subscriptions that remain unpaid after that date will be collected at the usual rate of Rs. 4.**

## சந்தாதாரர்களுக்கு அறிக்கை.

சந்தாதாரர்கள் எல்லோரும் ஜூன்மீ 30உக்குள் சந்தாத்தொகையை முன்பணமாக அனுப்பிவிடவேணுமென்று கேட்டுக்கொள்கிறோம். அத்தேதியிலிருந்து பாக்கிநிற்கும் சந்தாக்கள் வழக்கமாயுள்ள ரூ. 4 விகிதம் வசூல் செய்யப்படும். முன்பணமனுப்பத் தாமதிப்பதால் பத்திரிகை வெளியாவதும் தாமதப்படுவதால் எல்லோரும் சந்தாவை முன்பணமாகவே அனுப்பிவிடவேணுமாய் மிக வற்புறுத்திக் கேட்டுக்கொள்கிறோம்.

அ. ப. ஏஜன்ஸி,
காரியதரிசி.